


அம்மையே அப்பா ஒப்பிலா மணியே

அனபினில் விளைந்த ஆரமுதே

பொய்ம்மையை பெருக்கிப்

பொழுதினைச் சுருக்கும்

புழுத்தலைப் புலையயேன் தனக்குச்

செம்மையே ஆய சிவபதம்

அளித்த செல்வமே சிவபெருமானே

இம்மையே உன்னை

சிக்கெனப் பிடித்தேன்

எங்கெழுந் தருள்வது இனியே.

— *மாணிக்கவாசகர்.*

பிப்ரவரி 1988

# ஸப்தகிரி

இதழ் 9 மலர் 18

## உள்ளுறை

பககம்



### அட்டைப்பட விளக்கம்

முனனட்டையில் : கயிலைநாதன். சித்திரம் : கே. ஜெகதீஷ்.

2-வது : ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில்—ஸ்ரீநிவாச மங்காபுரம்.

3-வது : புதியதாகக் கட்டப்பட்டுள்ள தி. தி. தே. திருமண மணடபம—தனுக்கு.

பின்னட்டையில் : குலசேகராழ்வாரும, திருமழிசையாழ்வாரும். சித்திரம் : ஆர். பி. பாபுநாத்.

சிறபபாசிரியர் .
திரு. சிஎச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம, திருப்பதி.

அசசிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் .
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
" Sapthagiri "
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

மனிதன மகிழச்சியில் மூழகிடும்போது, தன் மகிழ்ச்சியைப் பிறரோடு பங்கிட்டுக் கொள்ளவே விழைகின்ருன். அதனுல் பெறும இன்பமானது பிறா மகிழ்சசியைப் பகிாந்து கொளளுமபோதும கிடைப்பதில்லே. ஆனுல் மனிதன் தன் துன் பத்தைப் பிறரோடு பஙகிடடுக கொளளத் துணிவதிலலே நம்மைப் போல் அவன வருந்துவதற்கு அவனுக்குப் பிரச்சனேகள் இலலேயே எனறு ஏங்குவது வேறு விஷயம். ஆனுல் துனபம் வந்த காலத்து, அவனேயறியாமல அவன் மனம் தனி மையை நாடுகின்றது. தனிமையில் தனனளவில அத்துனப (இனப)த்தை அசைபோடுவதையே அவன் மனம் விரும்பு கின்றது. இத்துனபம் தந்த அநதத் தனிமை நிலேயிலுமு அவன் சிந்தனே அவனேயறியாமல ஏதோ ஒன்றினே நினேக் கவே செய்கிறைது. தெனறலும, மலேயும், நீரும, மலரும் அவன் துன்பத்தைச சறறே லேசாக்குகின்றது. அவன் சிந்தனே சீரியதாகிறைபோது, அவ்இயறகையை ஆட்டிப்படைத்திடும் ஒரு சகதியினே அவன மனம் தேடுகின்றது. ஆம் இறை யுணர்வு அவன் ஆன்மாவை சற்றே தாககுகிறைது. அததாககுதல் பலமாக விளங்கிடுமபோது இறைநெறி எனும் பக்தி நெறி மலருகிறைது.

ஆதியில் சமயப் பிரிவுகள் இமமண்ணில் இருந்ததில்லே. கூட்டுக் குடும்பம் தனிக்குடித்தனம் ஆனது பிற சமய (வாழ்க்கை) நெறிகள இநதிய வாழ்ககை முறையில ஊடுருவியபோதுதான். வாழகைக நெறிகள சமய நெறிகளாக மாறி, அவறறுல் காலப போககில, குறுகிய மனப்பான்மை உணர்வால், சமய வெறிககு வித்திடப்பட்டது என்பது ஒரு கசப்பான உண்மையாகும். ரிக்வேத காலம முதல் சங்க காலம வரை பல பெயர்களில் பல கடவுளர்கள் விளங்கினுலும, தனி இறை வழிபாட்டு நெறி மலரவிலலே. ஏனெனின் எல்லா கடவுளர் வழிபாடும் பொது நெறி-சமூக நெறி களேயே வலியுறுததின வேற்றுமையில் ஒற்றுமையே பெரிதாகக காணப்பட்டது இந்து சமயம பல பிரிவுகளாக மாறினுலும், அவைகள்தம் தததுவக் கொளகைகள் அவ்வவ கடவுளர்களின் பெருமையினேயே பேசின. சமயத் தலேவர்கள் வழி நின்றே, அச்சமயங்களின பெருமையைப் பெரிதும் பரபபினர் சைவததைப் பரப்பிய சமயக்குரவர்களும, நாயன்மார்களும், வைணவத்தைப பரப்பிய ஆழ்வார்களும், ஆசாாய பெருமககளும்.

இவ்வாறு பெருமை பெற்ற இந்து சமயத்தின் நங்கூரங்களாக விளங்கின சங்கரர் இணேத்த ஆறு சமயங்கள், இவற்றில் வைணவம போன்றே பழமைப் பெருமையும், தத்துவச சிறப்பையும் கொண்டு விளங்குவது முக்கண்ணனே முதல்வனுகக கொண்ட சைவ சமயமாகும். 'தென்னுடுடைய சிவனே போற்றி' எனுமபடி தென்னக கலாசார வாழ்க் கையில தனக்கென ஒரு தனியிடம் பெறறுள்ள சைவ சமயம வேதக் காலத்திருந்தே சிறப்புப் பெற்றிருந்தது என் பதை வேதத் தொடாகளிலிருந்து அறிநது இன்புறலாம். மனம், உடல், அறிவு, ஆன்மா ஆகியவற்றைப் பக்குவப் படுததும் முகத்தான் தோன்றிய இறை நெறியின் அடிப்படைக் கூறுகளேத் தன்னகத்தே கொண்டு விளங்குவது சைவ சமயம், அசசமயததின மாண்பினே அது கொண்டு விளங்கும் தோத்திரப் பாக்கள் எண்ணிக்கையாலும், சாத்திர அறி வாலும் அறியலாம். பசு, பதி, பாசம எனும் தததுவப் பின்னணியில் அது காட்டும் ஆன்ம விடுதலே இன்பத்தின் பெருமையைச சிறக்கக் காணலாம்.

அக கறைமிடற்றணணல தன கரை காணு கருணேயைக் காட்ட பூண்டுள்ள கோலங்கள்தாம் எத்தனே? அவன் பெருமை பேசும் புணணியத் தலங்களதாம எதததனே? பிருமமாணடத்தின பெரும் உண்மையை உணர்த்திடும் வகையில, அருவுருவ வழிபாட்டின் அருமையைக் காட்டிடும் வகையில் விளங்கிடும லிங்க வழிபாடு கூறும இயற்கை உணமைகள் விஞ்ஞான உலகத்தையும வியப்பிலாழ்த்தும். அடுத்து சகுணப்பிரும்மம் மற்றும் நிர்க் குணபபிரும்மத்தின் உருவகமான நடராஜரின தாண்டவக் கோலம். முயலகன் எனும் ஆணவப் பிடியிலிருந்து ஜீவ சகதியை விடுத்து, தென்திசை யம வாதனேயிலிருந்து தடுத்து, சூர்ய சந்திர தீ எனும் மூனறு சக்திகளின் உதவியால், பாம்பு எனும் குண்டலினி யோக சகதியால், ஓங்கார ஒலியின்மூலம் முக்தி எனும் பேரின்பப் பேற்றினே அடையச் செய்யும் ஆற்றலே அத்திருவுருவம் விளக்குகின்றது. 'நவ வயூக ஸ்வரூபி'யான அம்முக்கணணன் மேற்கொண்ட திருவிளேயாடல் கள பல; அவை உணர்ததிடும் தத்துவக் கருத்துக்கள் பலப்பல. மார்க்கணடேய வரலாற்றுல் சரணுகதி தத்துவச் சிறப்பினே உணாத்தி, பஸ்மாஸ்வரன கதையால இறை நம்பிக்கையில் இடையில ஏறபடும சந்தேகத்தால் ஏற்படும் தீமை யினே விளக்கி, விருத்ராசுரன் விருததாந்தத்தால், தவத்தால் பல வரங்கள் பெறறுலும் அதன வலிமையால் சமுதாயத் திற்குத் தீங்கு ஏற்படுமாயின் தவச்சிலருமு தயங்காது அழிக்கப்படுவர் எனபதனே வலியுறுததி, இறை நெறியின் தத் துவத்தை நனகுணாந்தாலும், வாழககை உண்மைகளே உளமார கற்றிருந்தாலுமு, 'நான்'. 'எனது' எனும ஆணவம் அவனது அறிவில் கலந்தால, அழிவு அவனுக்கு எவராலும், எபபோதும் கிடைத்திடலாம் என்பதை இராவண அழிவு மூலம் காட்டியும் அவ்அபிஷேகப் பிரியன இவ்வணடத்திற்குப் பல நிதர்சன உண்மைகளே எடுத்துக் காட்டியுள்ளான்.

'தாரித்ரய துக்க தஹனுய நமச்சிவாய' எனும் வசிஷ்டர் வாக்கிற்கிணஙக சித்திக்கும் முக்திக்கும் வழிகாட் டிடும் அப்பஞ்சாட்சர நாயகனின் புகழினேச சமயக்குரவர்கள் தாச, சத்புதர, சக, சன்மார்க்கங்களின் வழிநின்று ஏத்தியும், அவாகள வழிநின்ற சந்தானக்குரவரும், நாயன்மார்களும, 'ஆன்ம விடுதலே'யினேத் தநதிடும் அவ் சம்ஹாரமூர்த்தி தந்திட்ட மெய்நெறியினே மேலும் வளர்த்தனர்.

இவ்வகையில் பழமை நெறிகளில் தலே சிறந்த வாழ்க்கை நெறியினேக் காட்டிடும் இந்து சமயங்களில் தனக் கென ஒரு தனி நெறியினேத தந்திட்ட அவ்உமையொருப்பாகனேயும், சரணுகதி தத்துவத்தின் இலககியஙகளாக விளங்கிடும் இத்திஙகளில் இம்மண்ணில் உதித்திட்ட குலசேகரரையும், திருமழிசையாரையும் அவர்களே வழிபடும் திருநாட்களில் தூய உள்ளத்துடனும் சீரிய சிந்தனேயுடனும் அவர்கள்தம் தோத்திரப் பாக்களால் தொழுதேத்தினுல் நாமும் நாடும் உயர்கதி அடைவது உறுதியேயாம்.

# செய்திச் சுருக்கம்

புதுதில்லியில் உள்ள தி. தி. தே. விருந்தினர் விடுதி அறைகளின் வாடகைக் கட்டணங்கள் கீழ்வருமாறு நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

பொதுமக்களுக்கு (நாள் ஒன்றிற்கு)

* குளிர்ச்சாதன வசதியுடன் கூடிய படுக்கைஅறைஒன்றினைக்கொண்ட அறை ஒன்றிற்கு ரூ. 100/-
* குளிர்ச் சாதன வசதியுடன் கூடிய, குடும்பம் ஒன்று தங்கக் கூடிய அறை ஒன்றிற்கு ரூ. 150/-
* படுக்கை ஒன்றினைக் கொண்ட சாதாரண அறை ஒன்றிற்கு ரூ. 50/
* குடும்பம் ஒன்று தங்கக்கூடிய சாதாரண அறை ஒன்றிற்கு ரூ. 75

தி. தி. தே. பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர்கள் மற்றும் தி. தி. தே. ஊழியர்களுக்கு:

குளிர்ச்சாதன வசதியுடன் படுக்கை அறை ஒன்றினைக் கொண்ட அறை ஒன்றிற்கு ரூ. 10/-

குளிர்ச்சாதன வசதி கொண்ட குடும்பம் ஒன்று தங்கக்கூடிய அறை ஒன்றிற்கு ரூ. 15/-

* படுக்கை ஒன்றினைக் கொண்ட சாதாரண அறைஒன்றிற்கு ரூ. 5/
* குடும்பம் ஒன்று தங்கக் கூடிய சாதாரண அறை ஒன்றிற்கு ரூ. 8/

ஃ ஃ ஃ

திருச்சானூர் மற்றும் திருப்பதியில் உள்ள தி. தி. தே. திருமண மண்டபங்களை வாடகைக்கு விடப்படும் காலமானது காலை 6 மணி முதல் மறுநாள் காலை 6 மணி வரை என்று கணக்கிடப்படும். இம்மாற்றம் 1—1—88 முதல் அமுல் நடத்தப்பட்டு வருகின்றது.

ஃ ஃ ஃ

திருமலையில் :

இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர். சங்கர்தயாள் சர்மா அவர்கள் 7-2-88 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். அன்று காலை திருமலையில் தி. தி. தேவஸ்தானத்தாரால் ரூ. 40 இலட்சம் செலவில் சுமார் 400 யாத்திரிகர்கள் அமரும் வகையில் கட்டப்படும்'நாராயணகிரி உணவு கட்டடத் தொகுதி' ஒன்றிற்கு அடிக்கல் நாட்டினார். இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவில், ஆந்திர மாநில அரசு வனத்துறை அமைச்சர் திரு. ஜி. முத்துகிருஷ்ணம நாயுடு, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சிஎச். வெங்கடபதிராஜு, சித்தூர் மாவட்ட ஆட்சியாளர் திரு. சி. விஸ்வநாத் ஆகியோர் பங்கேற்று உரையாற்றினர்.

ஃ ஃ ஃ

திருமலை,உலகில் உள்ள புண்ணியத் தலங்களில் முக்கியமான தொன்றாகக் கருதப்படுவதால், அங்கு எவ்வகையிலும் அரசியலுக்கு இடம் தரக்கூடாது என்ற மேலாண்மை மேற்கொண்டுள்ள தீர்மானத்தின்படி, எந்த வித அரசியல் கட்சி சம்பந்தப்பட்ட வரவேற்பு வளையங்களோ, விளம்பரக் கொடிகளோ, வாசக விளம்பரங்களோ திருமலையின் நான்கு மாட வீதிகளிலும், சன்னிதித் தெருவிலும், டி. பி. எம்.சாலையிலும்,கல்யாண கட்டாவிலிருந்து அன்னதான கட்டடம் வரை உள்ள பகுதியிலும், அரசமர சதுக்கத்திலிருந்து வைகுண்டம் க்யூ கட்டடம் வரையிலும் இடம் பெறக் கூடாது என்று முடிவு செய்யப்பட்டுள்ளது.

பிரம்மோத்சவம்

திருப்பதி அடுத்துள்ள ஸ்ரீநிவாசா மங்காபுரத்திலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்சவம் 7—2—88 முதல் 16—2—88 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட உள்ளது. 12—2—88 அன்று கருட சேவையும், 15—2—88 அன்று தேர்த்திருவிழாவும், 16—2—88 அன்று ச்க்ரஸ்நானமும் மிக முக்கிய நிகழ்ச்சிகளாக விளங்கும். இப்பத்து நாள் பிரம்மோத்சவத்தின் போது மாலை நேரங்களில் தி. தி. தே. தர்ம பிரசார சபை ஆதரவில் பல சமய கலைநிகழ்ச்சிகள் நடைபெறும்.

இந்து தர்ம சம்மேளன்

திருப்பதி அடுத்துள்ள ரேணிகுண்டாசாலையில் 9—1—88 முதல் 11—1—88 வரை மூன்றுநாட்களின் போது ஆந்திர மாநில விஷ்வ இந்து பரிஷத் சார்பில் இந்து தர்ம சம்மேளன் எனும் சமய மாநாடு ஒன்று நடைபெற்றது. தர்மக்ஷேத்ரம் என்று அழைக்கப்பெற்ற இத்தலத்தில் நடைபெற்ற இம்மாநாட்டினை பேஜாவர்மடத்தைச் சார்ந்த ஸ்ரீ விஷ்வேஷ தீர்த்தசுவாமிஜி அவர்கள் துவக்கி வைத்தார். இம்மாநாட்டில் சுவாமி சின்மயானந்தா அவர்கள் துவக்கவுரை ஆற்றினர். இம்மாநாட்டின் வரவேற்புக் குழுவின் தலைவராக தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் இம்மாநாட்டில் பங்கேற்றார். துவக்கநாள் விழாவின்போது ஆர். எஸ். எஸ். இயக்கத்தலைவர் திரு. பால சாகேப்தேவர்ஸ், பாரதீய ஜனதா கட்சி துணைத்தலைவர் திருமதி ராஜ்மாதா விஜயராஜே சிந்தியா, ஆர். எஸ். எஸ். இயக்கத்தின் செயலாளர் திரு. எச். வி. சேஷாத்ரி,விஸ்வ இந்து பரிஷத் அமைப்புச் செயலர் திரு. சதானந்தகாகடே மற்றும் பலர் உரையாற்றினர்கள்.

இம்மூன்று நாட்களின்போது இளைஞர், மகளிர், தொழிலாளர்கள் என்னும் பல பிரிவு நிலைகளில் சமயம் மற்றும் சமுதாயக் கருத்தரங்குகள் நடை பெற்றன. வரதட்சணை பெறல், உடன்கட்டை ஏறுதல், ஜாதி பெயரில் திறமை ஒடுக்கப்படல் போன்றவற்றை எதிர்த்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. மாலை நேரங்களில் கூச்சுபூடி, பரத நாட்டியம் மற்றும் கவிதை மாநாடு, சமயக்கலை நிகழ்ச்சிகள் போன்றன நடைபெற்றன. இம்மாநாட்டின் போது தி. தி. தே. திறந்து வைத்த சமயநூல் விற்பனை நிலையத்தில் சுமார் ரூ. 1,30,000 பெறுமான சமய நூல்கள் விற்கப்பட்டன.

ஃ ஃ ஃ

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஒரே சிவன் கோயிலான ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயிலின் முதல் வருடாந்திர பிரம்மோத்சவம் இம் மாதம் 15-2-88ஆம் தேதியிலிருந்து 5 நாட்களுக்கு நடைபெறும்.

# ருத்ராக்ஷ மகிமை



ஷண்முகனுக்குப் பரமசிவன் கூறிய படி நாராயண ரிஷி நாரதருக்கு ருத்ராக்ஷ மஹிமையை வர்ணித்தார். த்ரிபுராஸுரன் தேவ ப்ராம்மண ரிஷிகளை ஹிம்ஸித்து வந்தான். அவனைக் கொல்வதற்காக சிவன் அகோர மெனும் அஸ்த்ரத்தை நினைத்தார். ஆயிரமாண்டு அதைச் சிந்தித்திருந்தார். பிறகு கலங்கிய அவரது கண்களிலிருந்து கண்ணீர் சொட்டிற்று. அதிலிருந்து ருத்ராக்ஷம் என்ற வ்ருக்ஷம் தோன்றி முப்பத்தெட்டு வகையான ருத்ராக்ஷஙகளை உணடு பண்ணிற்று. சிவனது ஸூர்ய வடிவமான கண்ணிலிருந்து கபில வர்ணமான பன்னிரண்டு வகை ருத்ராக்ஷங்கள் தோன்றின. சந்த்ரமயமான நேத்ரத்திலிருந்து வெண்மையான பதினாறு வித ருத்ராக்ஷங்கள், அக்னிமயமான நெற்றிக்கண்ணிலிருந்து பத்துவகை ருத்ராக்ஷங்கள் உண்டாயின. முறையே அவை ப்ராம்மண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ர வர்ணமாகும்.

ஏகமுக ருத்ராக்ஷம் ஸாக்ஷாத் சிவ ஸ்வரூபம். ப்ரும்மஹத்தியைப் போக்கும். இரண்டு முகம் தேவியும், தேவனுமாம். இருவகை வினைகளை நீக்கும். மூன்றுமுகம் அக்னி ஸ்வரூபம். ஸ்த்ரீ ஹத்தி தோஷத்தை அகற்றும். நான்கு முகம் ப்ரும்ம மயம். நரஹத்தியை அகற்றும். ஐந்து முகம் காலாக்நி ருத்ரன் எனும் பரமசிவ ஸ்வரூபம். தகாததைப் பக்ஷித்தது. தகாதவரைப் புணர்ந்தது என்ற பாபத்தை போக்கும். ஆறுமுகம் கார்த்திகேயன். வலது கரத்தில் தரித்தால் ப்ரும்ம ஹத்யாதி பாபமகலும். ஏழு முகம் அநங்கன் எனப்படும். ப்ரும்மஹத்யாதி பாபத்தை அகற்றும். எட்டு முகம் விநாயக ஸ்வரூபம். அன்னமலை, பஞ்சு பொதி, ஸ்வர்ணமலை இவைகளைத் திருடிய பாபமும், நீச ஸ்தீரி, குரு ஸ்தீரி ஸங்க தோஷமும் இதனுல் நீங்கும். ஒன்பது முகம் பைரவ ஸ்வரூபம். அது புக்தி முக்திகளைத் தரும்.



சித்திரம் - திரு. பாபு—திருப்பதி.

ப்ரூணஹத்யாதிகளைப் போக்கும். பத்து முகம் ஜநார்த்தன ஸ்வரூபம். பூதப்ரேத பைசாசங்களை அகற்றும். பதினொரு முகம் ஏகாதச ருத்ர ஸ்வரூபம். அது பல அச்வமேத ராஜஸூய யாக பலனைத்தரும். கோடி கோதான பலனைத் தரும். பன்னிரண்டு முக ருத்ராக்ஷத்தை வலது காதில் தரித்தால் த்வாதசாதித்யர் கோமேத அச்வமேத பலனைத் தருவர். வ்யாதி ப்யம் அவனை அணுகாது.

பதிமூன்று முக ருத்ராக்ஷ ஷண்முகனுக்கு ஸமமானது. அதைத் தரித்தால் ரஸஸித்தி, ரஸாயன ஸித்தி முதலியன உண்டாகும். பித்ருஹத்தி, மாத்ருஹத்தி முதலிய பாபங்களும் அகலும். பதிநான்கு முக ருத்ராக்ஷம்

திரு. பி. குருமூர்த்தி சாஸ்திரிகள்
*மயிலாடுதுறை.*

# திருக்கச்சி நம்பி

தேவராஜ தயாபாத்ரம் ஸ்ரீ காஞ்சி பூர்ண முத்தமம்
ராமானுஜ முனேர் மான்யம் வந்தேஹம் ஸஜ்ஜனு ஸ்ரயம் ||

ஜனனம் : பூவிருந்தவல்லி. மாசி மிருக சிர்ஷம் ஆசார்யர் ஆளவந்தார். சிஷ்யர் ராமானுஜர்.

இவருக்கு காஞ்சி பூரணர், பார்க்கவப் பிரியர் என்ற பெயர்களும் உண்டு.

இவர் ஆளவந்தாரைக் குருவாக ஏற்று சகல சாஸ்திரங்களையும் கற்றவர்.

இவர் காஞ்சி வரதருக்கு ஆலவட்டக் கைங்கரியம் தவருது செய்து வந்தார்.

வியாச ஸூத்திரத்திற்கு ராமானுஜர் பாஷ்யம் செய்தபோது சில சந்தேகங்களை நிவர்த்திக்கும்படி நம்பிகளைக் கேட்டார். நம்பி வரதராஜனிடமிருந்தே அந்த சந்தேகங்களுக்கு விளக்கம் பெற்றுத் தந்தார். அவை :

1. அஹமேவ பரம் தத்வம்—பரம்பொருள் நானே
2. தர்சனம் பேத ஏவ ச—ஜீவாத்மா பரமாத்மா பேதம்
3. உபாயேஷீ பிரபத்தி ஸ்யாத்—உபாயமும் பரமாத்மபேதம்
4. அந்தம ஸ்ம்ருதி வர்ஜனம்—அந்திம காலத்தில் நினைக்கவும் வேண்டாம்
5. தேகவஸானே முக்திஸ்யா—சரீரம் முடிவில் மோக்ஷம்
6. பூர்ணுசார்ய ஸமாச்ரய—பெரியநம்பி திருவடிகளில் ஆச்ரயிப்பது

திருக்கச்சிநம்பி வைசிய குலத்தைச் சேர்ந்தவர். இவர் தந்தை இவருக்கும் இவர் சகோதரர் மூவருக்கும் தன் ஆஸ்தியைப் பங்கிட்டுக் கொடுத்தார். சில வருடங்களுக்குப்பின் புத்திரர்களை வரவழைத்து "நான் கொடுத்த சொத்துக்களை எப்படி அபிவிருத்தி செய்தீர்கள்?" என்று கேட்டார்.

கப்பல் வியாபாரத்தில் முதல்போட்டு அபிவிருத்தி செய்கிறேன் என்றுன் ஒருவன். லாபமாக வியாபாரம் செய்கிறேன் என்றுன் இரண்டாமவன். ஒரு தொழிற்சாலையை ஏற்படுத்தியதாகச் சொன்னுன் மூன்றுமவன்.

திருக்கச்சி "கலங்கா பெருநகரில் சேகரித்து வைத்தேன்' என்றுர். "அது எந்த நகரம்?" என்று தந்தை கேட்க, தம் பக்தர்களுக்குப் பொருள்களை விநியோகித்து விட்டதால் பரமபதத்தில் மறுமை செல்வம் காத்திருக்கிறது என்று விளக்கினுராம்.

நன்றி : ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள் வைபவம்.

கிடைத்தால் அதை தலையில் தரிக்க வேண்டும். அதைத் தரிப்பவர் உடல் ஸாக்ஷாத் சிவன் வஸிக்கும் இடம். தலையில் இருபத்தாறு, மார்பில் ஐம்பது, இரு பாஹுகளிலும் பதினுறு பதினுறு, கைகளில் பன்னிரண்டு பன்னிரண்டு, சிரஸ்ஸில் ஒன்று. மார்பில் நூற்றெட்டு, அல்லது ஐம்பது அல்லது இருபத்தேழு ருத்ராக்ஷம் தரித்துக் கொண்டால், ஒவ்வொரு க்ஷணத்திலும் ஒவ்வொரு அச்வமேத யாகம் செய்த புண்ணியம் உண்டாகும். இருபத்தோரு தலைமுறை முன்னுேர்களுக்கும் நற்கதியுண்டாகும்.

ருத்ராக்ஷத்தின் முகம் ப்ருமா. த்வாரம் ருத்ரன். அடிபாகம் விஷ்ணு. இப்படி த்யானம் செய்து அதைத் தரித்தால் போகமும் மோக்ஷமும் உண்டாகும். ஐந்து முகமுள்ளதும் மேலே முள்போல் சொர சொரப்புள்ளதுமான ருத்ராக்ஷங்களில் இருபத்தைந்தால் ஜபமாலை அமைக்க வேண்டும். ருத்ராக்ஷத்தின் முகம் முகத்துடனும். பின்புறம் பின்புறத்துடனும் சேர்த்துத் தொடுக்க வேண்டும். நடுவில் ஒன்றை மேல் முகமாக வைக்க வேண்டும். அது மேரு எனப்படும். சந்தன ஜலம், பஞ்ச கவ்யம், சிவ ஜலம் இவைகளால் அலம்பி சிவசக்தி மந்த்ரத்தால் தொட்டு கவசத்தால் மறைத்து மூல மந்த்ரத்தால் மந்திரித்து ஸத்யோஜாதாதி ப்ரோக்ஷித்து நூற்றெட்டு முறை மூல மந்த்ரம் ஜபித்து அதில் பார்வதி பரமேச்வரர்களை ப்ரதிஷ்டை செய்ய வேண்டும். இப்படிச் செய்த மாலையால் ஜபம் செய்தால் உடனே மந்த்ர ஸித்தி உண்டாகும்.

அந்தந்த தேவ மந்த்ரத்தால் இப்படி ஜபம் செய்ததைக் கொண்டு அந்தந்த தேவதா மந்த்ரத்தை ஜபிக்க வேண்டும். ஜப மாலையை சிரஸ், காது, கழுத்து ஆகிய இடங்களில் வைக்க வேண்டும். ஸ்நாநம், ஜபம், ஹோமம். வைச்வதேவம் சிவபூஜை, ப்ராயச் சித்தம், ச்ரார்த்தம், தீக்ஷை முதலியவைகளைச் செய்யும்போது ருத்

ராக்ஷ தாரணம் அவச்யமாகும். ருத்ராக்ஷமில்லாமல் வைதிக கர்மா செய்தால் நரகமடைவான். பட்டு அல்லது எருக்க நாரில் கோர்த்து ருத்ராக்ஷத்தைத் தரிக்க வேண்டும். ஸ்வர்ண மணிகளுடன் சேர்த்து தரிப்பது நல்லது. ஒருவர் அணிந்த மாலையை மற்றவர் அணியக் கூடாது. அசுத்தனாக இருக்கும்போது ருத்ராக்ஷம் தரிக்கக் கூடாது. ருத்ராக்ஷ மரத்தின் காற்று பட்ட செடி கொடிகளே நற்கதி அடைகின்றன. ருத்ராக்ஷ தாரணத்தால் ஸகல விதமான பாபங்களும் அகலுமென ஜாபால ச்ருதி கூறுகிறது. அதை அணிந்து சிவ நாமாவைக் கூறினால் போகாத பாபமில்லை. கைலாஸமும் கிடைக்கும். தேவரும் ருத்ராக்ஷ மஹிமையை உணர்ந்து அதை அணிகிறார்கள். அநேக ஜந்ம புண்யத்தால்தான் ருத்ராக்ஷந்தரிக்க ஆசை உண்டாகும். அதைக் கண்ணால் பார்த்தாலே புண்யம். தொட்டால் கோடி மடங்கு பலன் அதிகம். தரித்தால் நூறு கோடி மடங்கு அதிகபலன். ருத்ராக்ஷ மாலையால் ஜபம் செய்தால் லக்ஷ கோடி மடங்கு பலன். கை, மார்பு, கழுத்து, காது, தலை இவ்விடங்களில் ருத்ராக்ஷம் தரிப்பவன் ருத்ரனே ஆவான். தேவராலும், அஸுரராலும் அவன் வணங்கத் தக்கவன். இறக்கும் போது கழுத்தில் ருத்ராக்ஷ மாலை இருந்தால்கூட பாபியாய் கர்ம ப்ரஷ்டனாக இருப்பவனும்கூட நற்கதி அடைவான். ஆதலால் ஒரு ருத்ராக்ஷத்தையாவது அவச்யந்தரிக்க வேண்டும்.

குசக்ராந்தி (தர்ப்பமுடி) புத்ரஜீவா முதலிய மணிகள் ருத்ராக்ஷத்திற்கு ஒப்பாகாது. புருஷரில் விஷ்ணு, க்ரஹங்களில் சூர்யன், நதியில் கங்கை, முனிவரில் கச்யபர், தேவரில் சிவன், தேவியில் கௌரியைப் போல் மணிகளில் ருத்ராக்ஷ மாலையே சிறந்தது. சிவ பக்தனுக்கு ருத்ராக்ஷம் அளிப்பதும், ருத்ராக்ஷமணிந்தவருக்கு அன்னமளிப்பதும் இருபத்தோரு தலைமுறை ருத்ரலோகம் அளிக்கவல்லது. விபூதி ருத்ராக்ஷம், சிவபூஜை இல்லாதவனே சண்டாளன். பல பாபங்களைச் செய்தவனாயினும் மிலேச்சனாயினும் சண்டாளனாயினும் ருத்ராக்ஷ தாரணத்தால் சிவலோகம் செல்வான். சிரஸில் ருத்ராக்ஷம் தரித்தால் கோடி புண்யம். இரு கர்ணங்களிலும் அணிந்தால் பத்து கோடி. கழுத்தில் அணிந்தால் நூறு கோடி மூர்த்தாவில் தரித்தால் ஆயிரங்கோடி. பூணூலில் தரித்தால் பத்தாயிரங்கோடி. புஜத்தில் அணிந்தால் லக்ஷம் கோடி மடங்கு புண்யமும் உண்டாகும். மணி பந்தத்தில் தரிப்பது முக்திக்கு ஸாதனம். ருத்ராக்ஷத்தை ஸ்மரித்தாலும் ருத்ராக்ஷந்தரித்தவனைப் போல் கைலாஸம் செல்வான். வித்யை உள்ளவனாயினும் இல்லாவிடினும் ருத்ராக்ஷ தாரி கைலாஸம் செல்வான். ருத்ராக்ஷ பாரத்தைத் தாளாமல் கீழே விழுந்து இறந்த கழுதைக்குக் கூட கைலாஸம் கிடைத்தது.

தரித்ரனையும் தனிகனாகச் செய்யும் ருத்ராக்ஷதாரணம்.

கோஸல தேசத்தில் கிரிநாதன் என்ற ப்ராம்மணன் மிக்க தனிகனாகவும் தார்மிகனாகவும் இருந்தான். அவருக்கு குணநிதி என்றொரு புத்ரனிருந்தான். அவன் மிக்க அழகு வாய்ந்தவன். தனது குருவின் பத்னியான முக்தாவளீ என்பவளைத் தனது அழகால் மயக்கி அவளுடன் சேர்ந்து போகத்தை அனுபவித்தான். சில நாள் சென்றபின் குருவுக்கு விஷத்தைத் தந்து அவரைக் கொன்றான். இதை அறிந்து கண்டித்த தாய் தந்தையரையும் கொன்றான். குரு பத்னியுடன் சேர்ந்து தந்தை பொருளை எல்லாம் செலவு செய்து ச்ருங்காரத்தை நன்கு அனுபவித்தான். ஸுராபானம் செய்தான். ப்ராம்மணர் வீடுகளில் திருடினான். பந்துக்கள் அவனை கிராமத்தை

## துயிலெழுந்த பின் பிரார்த்தனை

"மயூரப்ரியா"

அதிகாலையில் எழுந்தவுடன் நம் வலது உள்ளங்கையைப் பார்த்துச் சொல்ல வேண்டியன :—

'கராக்ரே வஸதே லக்ஷ்மீ:
கரமத்யே ஸரஸ்வதீ
கரமூலே து கோவிந்த:
ப்ரபாதே கரதர்ஸனம்'

பின்பு இறைவனிடம் :

"ஹே பகவானே! தூக்கமென்னும் போர்வையினின்றும் விடுபட்டு நான் இன்று உலகமென்னும் அரங்கத்துக்குள் வந்திருக்கிறேன். தங்களால் உந்தப்பட்டு இன்று நான் செய்யும் காரியங்கள் அனைத்தையும் தங்களுக்கு அர்ப்பணித்துவிட உறுதி பூண்டிருக்கிறேன். அக்காரியங்களில், என்னுடைய எண்ணங்கள் சொற்கள், செயல்கள்—இவையனைத்தும் தூய்மையாக இருக்க அருள் புரியுங்கள். நான் பிறரைத் துன்புறுத்தாமலும் பிறர் என்னைத் துன்புறுத்தாமலும் இருக்க அருள் புரியுங்கள். இன்று முழுவதும் என்னை வழி நடத்திச் செல்லுங்கள்!" என்று மனங்கசிந்து, அன்புடன் பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டும்.

விட்டுத் துரத்தினார்கள். பத்னியுடன் காட்டிற்குச் சென்றான். அங்கே வரும் பல ப்ராம்மணர்களைக் கொன்று அவர்களது பொருளைத் திருடி ஜீவித்து வந்தான். பல நாள் சென்ற பின் அவன் இறந்தான். அந்த பாபி யைக் கொண்டு செல்ல யமகிங்கரர் வந்தனர். அதே சமயத்தில் சிவகிங் கரர் விமானத்துடன் வந்து அவனை அழைத்தார்கள். 'இவன் மஹா பாபி யல்லவா? எப்படி நீங்கள் இவனை அழைக்க வந்தீர்?' என யமகிங்கரர் கேட்க, 'இவன் இறந்த இடத்திற்குப் பத்து முழம் தூரத்தில் ஒரு ருத்ராக்ஷ மிருந்தது. அதனால் ஸகல பாபங்களும் அகல அவனுக்குக் கைலாஸம் கிடைத் தது என்றனர் சிவகிங்கரர். இத் தகைய மஹிமையுள்ளது ருத்ராக்ஷம்.

ருத்ராக்ஷ தர்சனம், ஸ்பர்சனம், தாரணம், ஜபம் ஆகியவை ஒன்றை விட ஒன்று லக்ஷம் மடங்கு பலனைத் தருபவை. நெல்லிக்கனி அளவுள் ளது உத்தமம். இலந்தைப் பழம் அளவு உள்ளது மத்யமம். கடலை அளவுள்ளது அதமமானது. புழு அரித்தது, அறுக்கப்பட்டதும், பிளந்ததும், மேலே கண்டகமில்லாத தும், காயத்துடன் கூடியதும், மேலே ஆவரணமுள்ளதுமான ருத்ராக்ஷத் தைத் தரிக்கக்கூடாது. தானே த்வாரமுள்ளதே உத்தமம். நாம் செய்த த்வாரமுள்ளது மத்யமம். ஸமமாகவும் த்ருடமாகவும் அழகாக வும் உள்ள ருத்ராக்ஷ மணிகளைப் பட்டுக் கயிற்றால் கோர்த்துத் தரிக்க வேண்டும். நாற்புறமும் ஒரே மாதிரி யானதும் மிக அழகானதும், உரைத் தால் ஸ்வர்ண ரேகை போன்றது மான ருத்ராக்ஷம் மிகச் சிறந்தது. மார்பில் இரண்டு மூன்று மாலைகளை தரிக்கலாம். தூங்கும் போதும் உண் ணும் போதும் எப்போதும் தரிக்க வேண்டும்... ஆயிரம் தரிப்பது உத் தமம். ஐந்நூறு மத்யமம். முன் னூறு அதமம். சிரஸில் ஈசாந மந் திரம். காதில் தத்புருஷம், நெற்றியில் அகோரம். ஹ்ருதயத்தில் அகோரம், கைகளில் அகோர பீஜம். வயிற்றில் வாமதேவம், மற்ற அங்கங் களில் பஞ்ச ப்ரும்ம மந்த்ரம் இவை களைக் கூறி ருத்ராக்ஷமணி அணிய வேண்டும். கோர்க்கும்போது மூல மந்த்ரத்தைக் கூற வேண்டும்.

ஏகமுக ருத்ராக்ஷம் பரதத்வத்தை விளக்கும். இரு முகம் அர்த்த நாரீ ஸ்வரரை ஸந்தோஷப்படுத்தும். மூன்று முகம் த்ரேதாக்னிகளை ஆனந்தப்படுத்தும். நான்முகம் நான் முகனை ஸந்தோஷப்படுத்தி க்ஞானத் தைத் தரும். ஐந்துமுகம் ஐந்து முகமுள்ள பரம சிவனுக்கு இன்பத் தைத் தரும். ஆறுமுகம் ஆறுமுகனை யும் கஜ முகனையும் ஸந்தோஷப்படுத் தும். ஏழு முகம் ஸப்தரிஷிகளையும் ஸப்த மாத்ருகைகளையும், ஸப்தாச்வ னை ரவியையும் ஸந்தோஷப்படுத்தி க்ஞானத்தையும் ஆரோக்யத்தையும் தரும். அதைச் சுத்தமான போதே தரிக்க வேண்டும். எட்டு முகம் அஷ்ட மாத்ருகை அஷ்டவஸு கங்கை இவர் களை ஸந்தோஷப்படுத்தும். ஒன்பது முகம் யமனுக்கு ஸந்தோஷகரமானது. ஏகாதச முகம் பதினொரு ருத்ரர்களை இந்த்ரனையும் ஸந்தோஷப்படுத்தும். பன்னிரண்டு முகம் விஷ்ணு ஸ்வரூப மானது. பன்னிரண்டு ஆதித்யர்களை ஸந்தோஷப்படுத்தும். பதிமூன்று முகம் காம தேவனை ஸந்தோஷப் படுத்தி ஸகல காமங்களையும் தரும். பதிநான்கு முகம் ஸர்வ ரோகங்களை யும் அகற்றும். ருத்ராக்ஷம் தரிப் போர் மது, மாம்ஸம், கஞ்ஜா, உள்ளி வெங்காயம், உள்ளிப்பூண்டு முதலிய வைகளை விலக்க வேண்டும்.

க்ரஹணம், விஷு, ஸங்க்ரமணம், உத்தராயணம் தக்ஷிணாயணம், அமா வாஸ்யை பௌர்ணமி இவை போன்ற புண்ய காலங்களில் ருத்ராக்ஷம் தரித் தால் ஸர்வ பாபங்களும் அகலும்.

கழுத்தில் முப்பதிரண்டு ருத்ரா க்ஷம், தலையில் நாற்பது, ஒவ்வொரு காதிலும் ஆறு ஆறு, ஒவ்வொரு கரத்திலும் பன்னிரண்டு, பன்னிரண்டு. ஒவ்வொரு புஜத்திலும் பதினாறு பதினாறு. ஒவ்வொரு கண்ணிலும் ஒவ் வொன்று, சிகையில் ஒன்று, மார் பில் நூற்றெட்டு என்ற முறையில் ருத்ராக்ஷம் அணிய வேண்டும். யக்ஞோப வீதத்திலோ கையிலோ, கழுத்திலோ வயிற்றிலோ பஞ்சாக்ஷரம் அல்லது ப்ரணவத்தால் ருத்ராக்ஷத்தைத் தரிக்கலாம். ருத்ரா க்ஷம் க்ஞான ஸாதநமாகும். சிகை யில் தரிப்பது தாரக தத்வம். இரு கர்ணங்களிலுள்ளது பார்வதி பர மேச்வரன். பூநூலில் தரிப்பது ப்ரும்ம ஸ்வரூபம். கரங்களில் தரிப் பது திக் தேவதா ஸ்வரூபமாகும். ப்ராம்மணர் மந்த்ரத்தைக் கூறியே ருத்ராக்ஷம் அணிய வேண்டும். மற்ற வர்ணத்தாருக்கு மந்த்ரம் அவசிய மில்லை.

ஸகல விதமான பாபமும் ருத்ரா க்ஷம் தரிப்பதால் அகலும். ருத்ரா க்ஷந்தரிக்க வெட்கப்பட்டால் நற்கதி உண்டாகாது. ருத்ராக்ஷதாரியின் பாத ஜலத்தை அருந்துவோர்க்கே நற்கதி என்றால் தாரணம் செய்பவர் பற்றி கூறவேண்டுமா? எப்படியாவது யாராவது ருத்ராக்ஷம் அணிந்தாலும் அவன் ருத்ரனே ஆவான்; அவன் ருத்ர லோகமே செல்வான்.

★



# அய்யர் - அய்யங்கார்

புனிதமான நம் பாரத பூமியில் தென்னாட்டில் ஸர்வ ஸாதாரணமாக இந்தச் சொற்கள் வழங்குகின்றன. பிராம்மண ஸமூகத்தினுள்ளேயே இவைகள் உபயோகிக்கப்படுகின்றன. ஏனையோரும் அந்தணர்களைக் குறிப்பிடும்போது இச்சொற்களை உபயோகிப்பர். விபூதி இடும் ஸ்மார்த்த பிராம்மணர்களை 'அய்யர்' என்றும், நாமமிடும் ஸ்ரீ வைஷ்ணவர்களான பிராம்மணர்களை 'அய்யங்கார்' என்றும் வழங்குகின்றனர். அனேகமாய் ஒருவருடைய பெயரின் முடிவில் இந்தச் சொற்களைச் சேர்த்து வழங்குவது மரபு. ஒருவருக்குப் பெயர் 'கோபாலன்' என்று வைத்துக் கொள்வோம். அதை அப்படியே வழங்கும்

ஸ்ரீஉப. வே. வித்வான் நாவல்பாக்கம்,
என். எஸ். தேவநாதாச்சாரியர் ஸ்வாமி

போது தெரியாத விவரம், இந்தச் சொற்களைக் கூட்டி வழங்கினால் தெரியும். 'கோபாலய்யர்' என்றால் ஒரு ஸ்மார்த்த பிராம்மணர் என்று தெரியும். 'கோபால அய்யங்கார்' என்றால் ஒரு ஸ்ரீவைஷ்ணவ பிராம்மணர் என்று தெரியும். இப்படியே 'கோபால கவுண்டர்' 'கோபால படையாட்சி' 'கோபாலநாயகர்' 'கோபால ரெட்டியார்' என்பது போன்ற வழக்குகளிலும் மேற்படி நபர் அவ்வோ இனத்தைச் சார்ந்தவர் என்பது எளிதில் புலனாகும். தனிப்பெயர்களுடன் இணைக்காமலும் இந்தச் சொற்களை உபயோகிப்பதுண்டு. 'அய்யங்கார் குளம்' 'அய்யங்கார் தெரு' என்பன பலவாறாக உள.

'ஐயர்-ஐயங்கார்' என்றும் இதே சொற்கள் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. இந்த இரண்டு வகையான வழக்குகளும் பொருள் வேறுபாடின்றியே உள்ளன. அய்யர்-ஐயர், அய்யங்கார்-ஐயங்கார் என்று சொல்லின் ஆரம்பத்திலுள்ள எழுத்தில்தான் வாசியிருக்கிறதேயன்றி பொருளிலோ உச்சாரணத்திலோ வித்யாஸம் யாதுமிலது.

இதேபோல் மாத்வ ப்ராம்மணர்களையும் 'ராயர்-ராவ்-ஆச்சார்' என்று வழங்குவர். கோபாலராயர், கோபாலராவ், கோபாலாச்சார் என்பன காண்க. இதேபோல் ஸ்மார்த்த வைஷ்ணவர்களிலும் 'சாஸ்திரி' ஆசார்யர்' என்பதைப் பெயருடன் கூட்டி வழங்குவதுண்டு. 'கோபால சாஸ்திரி, கோபாலாசார்யர்' என்பன காண்க.

உட்புகுந்து நோக்கில், இவ்வழக்குகளில் மற்றொரு விசேஷமுமுள்ளமை புலனாகும். ஸ்மார்த்தப் பிராம்மணர்கள் தமது பெயருடன் 'அய்யர் அல்லது ஐயர்' என்பதைச் சேர்த்துச் சொல்வதனால் தமது 'தரம்' சிறிது குறைவதாகவும், 'சாஸ்திரி' என்பதை இணைப்பதனால் அது உயர்வதாகவும், கருதுவர். அதுவேபோல் ஸ்ரீவைஷ்ணவர்களும் தமது பெயருடன் 'அய்யங்கார்' 'ஐயங்கார்' என்னும் சொற்களைக் கூட்டுவதைக் காட்டிலும் 'ஆசார்யர்' என்பதைச் சேர்த்துச் சொல்வதை உயர்வாகக் கருதுவர். இப்படியே மாத்வர்களிலும் 'ராவ்-ராயர்' என்பதைக் காட்டிலும், 'ஆச்சார்' என்பதைச் சேர்த்துச் சொல்வதனால் தமது 'தரம்' உயர்வதாகக் கருதும் வழக்கம் ஊன்றி நிற்கிறது. இதெல்லாம் நாட்டு மக்களின் அன்றாட உபயோகத்தில் வேரூன்றிவிட்ட விஷயங்கள். இவற்றுக்கெல்லாம் பொருத்தமான காரணங்கள் காண்பிப்பது சாத்தியமுமில்லை, அவசியமும் இல்லை. மாத்வ ப்ராம்மணர்களின் பெயர்களுடன் முடிவில் கூட்டப்படும் சொற்களை இக்கட்டுரையில் நாம் ஆராயப் போவதில்லை. மற்றைய இரண்டு வகை அந்தணர்களின் பெயர்களின் முடிவில் சேர்க்கப்படும் சொற்களையே எமது சிற்றறிற் கெட்டிய வரை ஆராய்ந்து பார்ப்போம்.

இதில் 'அய்யர்' என்னும் சொல் தான் பழமையானது. அதன் வடிவமே பற்பல மாறுபாடுகளுடன் மேலே காட்டிய ஏனைய சொற்களாக மாறியிருக்கிறது. மலையுச்சியில் சிறு வாய்க்காலாக ஆரம்பிக்கும் ஆறு இடையில் பற்பல சிற்றாறுகளுடன் கலந்து கடலில் கலக்கும்போது பிரம்மாண்டமாக மாறிவிடுகிறதல்லவா? அதுவேதான் இதற்குதாஹரணம்.

வேதங்களில் 'अर्य': (அர்ய:) என்னும் சொல் காணப்படுகிறது. இது 'शूद्रः', (சூத்ர:) என்னும் சொல்லுடன் இணைந்தே வருகிறது. இரண்டிடம் காண்மின்!

" यद्ग्रामे यदरण्ये यत्सभायां यदिन्द्रिये ।
यच्छूद्रे यदर्ये एनश्चकृमा वयम् ॥ "

(தைத்-ஸம்-1-8-3)

" सप्तदशभिरस्तुवत शूद्रार्यावसृज्येताम् "

(தைத்-ஸம்-4-3-10)

இதுபோல் பல உண்டு. இங்குக் காணப்படும் 'अर्यः' என்னும் சொல் தான் 'அய்ய' என்று தமிழ் மொழியில் சிறுமாறுபாடுடன் வழங்கி வருகிறது. இதன் தத்துவத்தை விளக்குவோமினி.

இதற்குபயோகமாக, ஸம்ஸ்க்ருத பதங்கள் தமிழில் உச்சரிக்கப்படும் போது ஏற்படும் சிறு மாறுதலைக் காட்ட வேண்டியிருக்கிறது. ஸம்ஸ்

# தேவகி மைந்தனைச் சேவிப்போம்

நெஞ்சாரத் துதிப்பார்க்கும் நேசிப்பார்க்கும்
நித்தம்பல வசைமொழியும் நேரத்திற்கோர்
வஞ்சனையும் கொண்டவனை எதிர்த்த பேர்கள்
வலியற்றுத் தோற்றபோதும் வாழ்வளிப்பான்!
கொஞ்சவரும் மாதருடன் கூத்தடிப்பான்;
கொதித்துவரும் பதைவர்தமைக் கொன்றொழிப்பான்!
தஞ்சமென எவரேனும் சரணடைந்தால்
தாங்கிடுவான் கண்ணனெனில் தயங்குவேனோ?

துருவனுக்கும் கம்சனுக்கும் பாஞ்சாலிக்கும்
தொட்டிழுத்த முதலைக்கும் துறக்கமீந்தான்!
வறுமையிலும் தன்னினைவால் வாடித் தேய்ந்த
குசேலனுக்கும் வரமளித்துச் செல்வந் தந்தான்!
ஒருமனதாய்க் காதலித்த கோபியர்க்கும்
உத்தவர்க்கும் ஓங்குபுகழ் உவந்த ளித்தான்!
கருமைநிறக் கண்ணன்நேர் கடவு ளுண்டோ?
காகுத்தன் நம்பினோர்க்குக் கவலை யுண்டோ?

பாண்டவரைக் காத்தருளும் பான்மை தன்னால்
பாவிமகன் துரியனிடம் தூது போனான்!
வேண்டியவர் வேண்டாதார் விமலன் பாரான்!
வித்தகங்கள் விநயங்கள் வேகா! வேந்தாய்
ஆண்டவனே அடிமைகளோ ஆராதித்தே
அபயமெனில் அங்கெழுவான்! அன்பர் நேயம்
தாண்டாதான் கண்ணபிரான்! தருக்கி நின்றால்
தண்டிப்பான் மன்னிப்பான் தகவில் நிற்பான்!

வேதத்தின் முடிபொருளாய் விளங்கும் நாதன்
வேசையாம் பிங்களையும் குருவாய்க் கொண்டான்!
தாதனும் ததிபாண்டன் வேண்டிக் கொள்ளச்
சட்டிக்கும் பானைக்கும் மோட்சம் தந்தான்!
பாதகனும் இரணியனைக் கொன்ற போது
பதம் கேட்டான் தந்தைக்கும் பிரகலாதன்:
சாதகமாய்ச் சந்தித்கே வீட ளித்தான்!
சமமாகக் கண்ணனுக்கோர் தெய்வம் சாற்றீர்!

தன்நாமம் சிலகாலம் தரித்த தற்காய்ப்
பவுண்டரனை அழித்துத்தன் சரணம் தந்தான்!
தன்குலத்து யாதவர்க்குத் தர்மம் சொல்லத்
தறிகெட்டுத் திரிந்ததனால் நாசம் செய்தான்!
மன்பதையில் தீயோரை மாய்த்து நல்லோர்
வாழ்தற்கே அவதாரம் பத்தெடுத்தான்!
ஜென்மங்கள் இல்லாமற் செய்வதற்குத்
தேவகிதன் மைந்தனையே சேவிப் போமே!

மார்தந்த அசோதைக்கு மாயன் வாயுள்
உலகுகாட்டித் தெய்வமெனக் காட்டி நின்றான்!
ஈரடியால் மூவுலகை அளந்து காட்ட
மாவலிமுன் விசுவரூபக் காட்சி தந்தான்!
போர்க்களத்தில் வீட்டுமனின் புன்மை கண்டு
பொன்னாழிப் படையேந்திக் காட்சி தந்தான்!
ஏரார்ந்த கண்ணனுக்கே ஈடொன்றில்லை!
எழிற்கோலம் காணஉள்ளம் ஏங்கும்! ஏங்கும்!

ச. கறுப்பையா—இராமநாதபுரம்.

க்ருத பாஷையில் இருக்கும் எழுத்துக்களின் தன்மை, அதன் உச்சாரணங்களுக் கேற்றவாறுகவே அமைந்துள்ளது. அவ்வாறே தமிழ்மொழியின் எழுத்துக்களின் அமைப்பும் அதன் சொற்களை ஸ்பஷ்டமாக உச்சரிப்பதற்குத் தக்கவாறுகவே அமைந்துள்ளது. ஒரு மொழியின் சொல்லை மற்றொரு மொழியின் எழுத்துக்களைக் கொண்டுமாறுபடாமல் உச்சரிக்க முற்படும்போதுதான் சங்கடம் தோன்றுகிறது. அது ஒருவாறுகச் சரிக்கட்டப்படுகிறது. அப்போது உச்சரிப்பில் சிறு மாறுதல் தவிர்க்க முடியாததாக வந்துவிடுகிறது. இது ஸர்வஸகஜமாகி விட்டது. சிலவற்றையே காட்டுவோம்.

| தமிழ் | ஸம்ஸ்க்ருதம் |
|---|---|
| வாழைப்பழம் | वालैपलम |
| அசமகாராச: | अज महाराज: |
| பழுப்பு | पलुप्पु |
| சலசம் | जलजम् |
| இந்திரன் | इन्द्र: |
| பருப்பதம் | पर्वत: |
| இலக்குமி | लक्ष्मी: |
| அய்யன் | अर्य: |
| ஆத்துமா | आत्मा |
| வண்ணம் | वर्ण: |
| கிருட்டினன் | कृष्ण: |

இவ்வகையில் ஏராளமாகக் காட்ட முடியும். விரிவைத் தவிர்க்க வேண்டி இவ்வளவில் நிற்கிறோம்.

இந்த உச்சாரண மாறுபாட்டிற்கு அவ்வோமொழியில் உள்ள எழுத்துக்களின் பற்றுக்குறையே காரணமென்பது வெள்ளிடைமலை. மற்றும் இதற்குக் காரணம் மேற்படி மொழிகளின் கோட்பாடுகளுமாம். ஸம்ஸ்க்ருத மொழியில் மெய்யெழுத்துக்கள் ஒன்றோடொன்று சேர்த்து உச்சரிக்கப்படுவதில் யாதொரு கஷ்டமுமில்லை. நினைத்தபடியெல்லாம் உச்சரிக்கலாம். ஆனால் தமிழில் அவ்வாறில்லை. ஒரே இனத்தைச் சார்ந்த மெய்யெழுத்துக்கள் தங்குதடையின்றிக்கே சேர்த்து உச்சரிக்கப்பட முடியும்.

உதாரணம்:

'அம்மா - அப்பா - அண்ணா - அய்யா அக்கா - அச்சம் - அட்டை - அத்தை- அங்ஙனே' என்றிப்படிப் பலவற்றையும் காணலாம். இதுவேபோல் ஒரே இனத்தைச் சார்ந்த அனுநாஸிகாக்ஷரமும் மற்ற எழுத்துங்கூட ஆயாஸமில்லாமல் உச்சரிக்கப்படும்.

அங்கம் - சங்கம் - பங்கம் - மங்கை- சங்கு-பஞ்சம்-துஞ்சு- எஞ்சிய-விஞ்சிய அண்டம் - பண்டம் - சண்டை - துண்டு- அந்தணர்-சிந்தை-பந்து-உந்து-அம்பு. பாம்பு - அம்பாள் - உம்பர் - என்பன காண்க. இவ்வாறே வல்லினங்களிலும் காணலாம் :-

இல்லறம் - அய்யனர் - சுற்றம் - வள்ளி. இத்யாதிகள் உதாரணம்.

மாறுபட்ட இனத்தைச் சார்ந்த மெய்யெழுத்துக்கள் சேர்த்து உச்சரிக்கப்படும்போதுதான் விசித்திரமான மாறுதல்கள் தோன்றுகின்றன:

| | |
|---|---|
| சக்கரம் | (चक्रम्) |
| வக்கிரம் | (वक्रम्) |
| சத்தியம் | (सत्यम्) |
| வாக்கியம் | (वाक्यम्) |
| சூரியன் | (सूर्यः) |
| பாண்டியன் | (पाण्ड्यः) |
| பாரிசம் | (पार्श्वम्) |
| நிருத்தம் | (नृत्तम्) |
| விருத்தம் | (वृत्तम्) |
| இலக்குமி | (लक्ष्मीः) |
| சங்கிரகம் | (सङ्ग्रहः) |
| புண்ணியம் | (पुण्यम्) |
| காப்பியம் | (काव्यम्) |

இப்படி ஏராளமாகக் காணலாம். இவ்விடங்களில் ஓர் உயிரெழுத்தை இடையில் சேர்த்து உச்சரிப்பது மரபு. ஸம்ஸ்க்ருதத்தில் இந்தக் கஷ்டமில்லை.

இவ்வழியிலேயே ஊன்றிக் கவனித்தால் 'सूर्य' என்பது 'சூரியன்' என்றுற்றபோல, 'आर्य' என்பதும் 'அரியன்' என்றாகியிருக்க வேணும். ஆனல் அவ்வாருகவில்லை 'அய்யன்' என்றே திரிந்திருக்கிறது. அதாவது வேற்றினத்தைச் சார்ந்த மெய்யெழுத்துக்களான' 'ர்-ய' என்னுமிவைகளைச் சேர்த்து உச்சரிக்க வேண்டிய அவசியமேற்பட்ட பொழுது இடையில் ஓர் உயிரெழுத்து சேர்க்கப்படவில்லை. வெவ்வேறான இரண்டு மெய்யெழுத்துக்களை ஒரே இனமாகப் பண்ணுவதன் மூலம் அது சரிக்கட்டப்பட்டுவிட்டது. 'ர் - ய' என்பது 'ய் - ய' என்று மாற்றப்பட்டு விட்டது. உச்சாரணத்திலுள்ள சங்கடமும் நிவ்ருத்தியாகிவிட்டது. இதுவும் ஒரு ருசிகரமான நிகழ்ச்சியேயாம். இதை ஆராய்ந்து பார்ப்போமினி.

தமிழ் மொழியிலுள்ளதுவே போன்றதான பல் வழக்கங்களுள்ளது 'ப்ராக்ருதம்' (प्राकृत) எனப்படும் பாஷை. 'சாதாரணமான மக்களின் வரும் பேசும் பாஷை' என்பதுதான் 'ப்ராக்ருதம்' என்னும் பெயரின் அர்த்தம். இதற்கு எதிர்ச்சொல் 'ஸம்ஸ்க்ருதம்' என்பதாம். ஸம்ஸ்க்ருத நாடகங்களில், பெண்களும் மட்டரகமான வர்களுமான கதாபாத்ரங்களின் வார்த்தைகள் இதிலேயே அமைக்கப்படும். 'பாலீ' (पाली) என்னும் பாஷை இவ்வகையைச் சார்ந்ததே. அனேகமாக, புத்தருடைய உபதேசங்கள்- நூல்கள்-இவையெல்லாம் இம்மொழியிலேயே உள்ளன. இந்த 'ப்ராக்ருத' மொழியின் ஸம்பந்தமே 'அர்ய' என்னும் ஸம்ஸ்க்ருத வார்த்தையைத் தமிழில் 'அய்ய' என்று மாற்றிவிட்டது.

இந்த 'ப்ராக்ருதம்' ஸம்ஸ்க்ருதம் போலவே இருக்கும். ஆனல் சில மாறுபாடுகளும் காணப்படுமிதில். இதற்காகவே ஏற்பட்டிருக்கும் 'ப்ராக்ருதவ்யாகரணம்' (प्राकृतव्याकरणम्) இதன் கோட்பாடுகளை விளக்கமாகக் கூறும். இரண்டு மெய்யெழுத்துக்களின் சேர்க்கையில் உச்சரிக்கும் முறையும் அவற்றிலொன்றும். தமிழ் மொழியில் போலவே இதிலும் இவ் விஷயம் உள்ளது. அதாவது ஒரே இனத்தில் உள்ள மெய்யெழுத்துக்களிரண்டு சேர்த்து உச்சரிக்கப்படும் போது கஷ்டமேதுமில்லாமல் உள்ளபடியே உச்சாரணம் பண்ணப்படும். வேற்றினங்களைச் சார்ந்த மெய்யெழுத்துக்களின் சேர்க்கை அவசியமாகும்போது அவை இரண்டும் ஒரே இனமாக மாறிவிடும். சில உதாரணங்கள் காண்மின்.

| ஸம்ஸ்க்ருதம் | ப்ராக்ருதம் |
|---|---|
| आत्मा | अप्पा |
| (ஆத்மா) | (அப்பா) |
| आत्मनः | अत्तणो |
| (ஆத்மந:) | (அத்தணோ) |
| चक्रपाणिः | चक्कपाणी |
| (சக்ரபாணி:) | (சக்கபாணீ) |
| आर्यपुत्र | अज्जउत्त |
| (ஆர்யபுத்ர) | (அஜ்ஜஉத்த) |
| अच्युत | अच्चुअ |
| (அச்யுத) | (அச்சுஅ) |

இப்படிப் பல உண்டு.

ப்ராக்ருதம் என்னும் மொழி ஸம்ஸ்க்ருத மொழியின் சிதைந்த வடிவமேயாகும். ஸம்ஸ்க்ருதத்தின் 'சாயல்' இதில் படிந்திருப்பதை எளிதில் கண்டு கொள்ளலாம். அச்சிடப்பட்டிருக்கும் நாடகங்களில் ப்ராக்ருத மொழியிலுள்ள சொற்களுக்கேற்ப ஸம்ஸ்க்ருத பதங்கள் ஆங்காங்கு தரப்பட்டிருக்கும். இதற்கு 'छाया' என்றே பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. தற்காலம் நம் நாட்டில் வழங்கிவரும் ஹிந்தி, மராத்தி முதலான மொழிகள் யாவையும் இந்த ப்ராக்ருத மொழியின் தோற்றங்களேயாம்.

இந்த ப்ராக்ருத மொழி, சாதாரணமான (கல்வி கேள்விகளில் முதிர்ச்சி பெறுத) ஜனங்களால் பேசப்பட்டு வந்ததென முன்னமே சொன்னேம். அதுவே போன்ற தமிழ் மொழியும் இதன் கோட்பாடுகளை எளிதாகப் பின்பற்றிவிட்டது. பொதுமக்களின் அன்ருட வாழ்க்கைப் புழக்கம் அதிக சக்தி வாய்ந்ததல்லவா? கல்வியில் முதிர்ச்சி பெற்ற புலவர்களிடையே நடமாடும் ஸம்ஸ்க்ருத-தமிழ்ச் சொற்கள் வழக்கில் வருவது தேய்ந்து

# ஸ்ரீபாதராஜர்

ஸ்ரீ வியாஸ ராஜரின் வித்யா குருவாக விளங்கிய மஹா புருஷர் ஸ்ரீபாதராஜர். ராஜ யோகத்துடன் வாழ்ந்தவர். நாள்தோறும் அறுபதுவகை பதார்த்தங்களுடன் விருந்து ஏற்பார். பட்டுப் பீதாம்பரங்களைத் தரித்துப் பகட்டுடன் காட்சி அளிப்பார். பொன் ஆபரணங்களைப் பூண்டு அலங்கார புருஷராய் அவையில் அமருவார். அவர் உபயோகிக்கும் உயர்வகை சந்தனத்தின் சுகந்தம் அவருடைய வருகையை முன்கூட்டியே மக்களுக்கு அறிவித்துவிடும். குதிரை, யானை அல்லது தங்கப் பல்லக்கு முதலியவைகளைத் தாம் பயணம் செய்யப் பயன்படுத்துவார். அவருடைய ஆடம்பர வாழ்வு மக்களில் ஒரு சாராரிடம் சலசலப்பை ஏற்படுத்தியது. 'சன்னியாசிக்கு ஏன் இந்த சுகபோகம்?' என்ற கேள்வி எழுந்தது. எனவே அவர் தாம் இந்த சுகானுபவத்தை ஏற்று இருப்பதற்கு தெய்வ சங்கல்பமே காரணம் என்பதை பலவகைகளில் நிரூபித்துக் காண்பித்தார். எடுத்துக் காட்டாக ஒரு நிகழ்ச்சி. ஒரு சமயம் அவர்தம் பரிவாரங்களுடன் திக்குத் தெரியாத ஒரு காட்டினுள் சிக்கிக் கொண்டார். அன்று எவனோ ஒருவன் சுவாமிகள் செய்யும் பூஜைக்கும் அன்றைய சமாராதனைக்கும் தேவையான பொருள்களை அங்கு உரிய நேரத்தில் கொண்டு வந்து சேர்த்தான். பூஜையும் சமாராதனையும் வழக்கப்படி விமரிசையுடன் நடந்தேறியது. மஹா பக்தனான துருவனின் மறு அவதாரமே ஸ்ரீபாதராஜர் என்ற செய்தி இங்குக் குறிப்படத்தக்கது.

அனுதினமும் அதிகாலை நேரத்தில் ஸ்ரீபாதராஜரைத் தியானிப்பதின்மூலம் அன்றைய நல்விருந்துக்கும் அன்றைய இனிய பொழுதுக்கும் நாம் உறுதி செய்து கொள்ள முடியும்.

கர்நாடக மாநிலம் முளுபாகலு என்னும் இடத்தில் அமைந்திருக்கும் இவருடைய பிருந்தாவனத்தைத் (நரசிம்ம தீர்த்தம்) தரிசித்து நாம் சகல சௌபாக்கியங்களையும் பெறுவோம்.

ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

மறைந்து விட்டது. புலவர்கள் கோஷ்டியிலும், அவர்களால் எழுதப்பட்ட நூல்களிலுமே அவை ஒளிந்து கொண்டு வாழ்கின்றன. 'अर्यः' (அர்ய:) என்னும் ஸம்ஸ்க்ருத பதமும் இந்த ப்ராக்ருத மொழியின் 'ஸஹவாஸத்தால்' தமிழில் 'அய்ய' என்றே மாறிவிட்டது. 'அரிய' என்று மாறவில்லை.

இதில் மற்றொரு விஷயம் கவனிக்கப்பட வேணும். ஸம்ஸ்க்ருதத்திலுள்ள 'य' 'ய' என்னும் எழுத்தோடு 'र' (ர) என்னும் எழுத்து சேர்த்து உச்சரிக்கப்படும்போது ப்ராக்ருத மொழியில் இரண்டு விதமான மாறுதல் இடம் பெற்றுள்ளது. 'ய' என்னும் எழுத்தையே இரட்டிப்பது ஒரு முறை. உதாரணம்:

आर्यपुत्र (ஆர்யபுத்ர) अय्यउत्त (அய்ய உத்த) 'ய' என்னுமெழுத்தை 'ஜ' என்னுமெழுத்தாக மாற்றி அதை இரட்டிப்பது மற்றொரு முறை: आर्यपुत्र (ஆர்யபுத்ர) अज्जउत्त (அஜ்ஜ உத்த).

இவற்றுள் முதல் முறையையே பின்பற்றித் தமிழ் மொழியின் உச்சாரணம் அமைந்துள்ளது. அதனால் இன்று தமிழ் மொழியில் சர்வசாதாரணமாக வழங்கி வரும் 'அய்ய' என்னும் சொல் ஸம்ஸ்க்ருதத்திலுள்ள 'अर्यः' என்பதின் வடிவமே என்பது அசைக்க முடியாத தத்துவமாகிவிட்டது. அய்யர் என்றும் அய்யங்கார் என்றும் சொல்லுவதே இச்சொல்லின் பொருத்தமான உச்சாரணம் என்பதும் ஸ்தாபிக்கப்பட்டது.

ஐயர்-ஐயங்கார்-என்னும் உச்சாரணமும் தொன்று தொட்டு ஸர்வ ஸாதாரணமாய் வழங்கி வருகின்றதே! அதற்குக் காரணம்? இதை விளக்கிக் கூறுவோமினி.

அய்யர்-ஐயர்-எண்ணும் இருவகைக்குள் உச்சாரணத்திலும் எழுதுவதிலும் சிறு அளவு தாரதம்யம் இருப்பதுண்மையே. ஊன்றிக் கவனிப்பவர்களுக்கு இவ்விஷயம் புலனாகாது. அதனால் அவர்கள் இரண்டு விதமான சொற்களையும் ஒரே விதமாகவே எண்ணி உபயோகித்து வருகின்றனர். தமிழ் உச்சாரணத்தில் இவ்வாறான குழப்பத்திற்கு இடமிருக்கிறது. 'நடை - குடை - மடை - சட்டை-என்னும் சொற்களின் முடிவிலுள்ள உயிர்மெய்யெழுத்தாகிய' 'டை' என்பதை அதன் (ஐகாரத்தின்) முழு அளவு உச்சாரணத்துடன் வழங்குகின்றனர். ஆனால், சடையன் - மடையன் - உடைமை-உடையவர்-அடையாளம்-என்பது போன்ற சொற்களிலுள்ள 'டை' என்னுமெழுத்தின் முழு உச்சாரணம் வழக்கிலில்லை. அரை அளவு உச்சாரணமே வழங்குகிறது. எழுதிப் பார்த்தால் இந்த தாரதம்யம் தெரியாது. வழக்கமாக உச்சரிப்பவர்களுக்கு மட்டுமே இதன் தத்துவம் விளங்கும். அய்யர் - அய்யங்கார். ஐயர் - ஐயங்கார் - என்னும் சொற்களின் விஷயமும் இது போன்றதே.

இலக்கணமறிந்தவர்கள் 'ஐ' என்னுமிவ்வெழுத்தை 'संध्यक्षर' என்று கூறுவர். 'கூட்டெழுத்து' என்பது அதன் பொருள். "Diphthong" என்று ஆங்கிலத்தில் வழங்குவர். வேத லக்ஷணமான 'ப்ராதிசாக்யம் சீக்ஷை' முதலியவைகளில் இதன் நிலை நன்கு

(29.ம் பக்கம் பார்க்க)

 

# அர்ச்சை

 

எம்பெருமானை அடைய பற்பல வழிகள் உண்டு. அவனும் பற்பலபடியாக (உருவங்களில்) ஸேவை தருகிறான்.

அதில் பர-வ்யூக-விபவ-அர்சசை-அந்தர்யாமி என்று ஐந்து வடிவங்களாக அவன் நிலையைப் பெரியோர் கூறுவர். அவன எங்கும் நிறைநத வனாகவும் உள்ளும் புறமும் இருந தாலும மேற்சொன்ன ஐந்து வடிவங்களாக அவனைக் கூறுகின்றன இதிகாச புராணங்கள்.

முதலாவது பரவாஸ தேவனாக பரமபதத்தில் இருக்கும் நிலை. நம் போன்ற சேதனர்களுக்கு சரணாகதியின் மூலமே செல்லமுடியும். ஆனால் சென்றவா மறுபடியும் பிறக்காமல் ஸ்ரீவைகுண்டத்திலேயே தங்கி விடுவதால் இந்த நிலை எப்பேற்பட்டது. அங்குச சென்றவர் என்ன பண்ணுகிறார் எனபது நமககு சாஸ்திரம் கொண்டு காண முடியுமே தவிர கண்டவர் (அநநிலை) சொல்லிக் கேட்க முடியாது. அதாவது முக்தி அடைநதவர்களுககு இது செல்லத் தகுந்தது. நேரில் கண்டறிய முடியாது.

இரண்டாவதாக வ்யூக அவதாரம். இது திருப்பாற்கடலில் பளளி கொணட நிலை. இதுவும் தேவர்கள், நாரதராதிகள் முதலானவர்களாலேயே கண்டு அனுபவிக்கத்தக்கது. திருபபாறகடல எங்கு இருககிறது, அங்கு பரமன் எப்படி ஸேவை தருகிறான், அவன அழகு எப்படி எனபது போன்ற விஷயம நம்போன்ற பூலோக வாசிகளால இங்கிருந்து காண முடியாத நிலை. இது தேவர்களின் குறைகள், கஷ்டங்கள் தீர்ப்பதற்காகவே பாற்கடலில் பள்ளிகொண்டது. பெரியாழ்வார் இந்த நிலையை சொல்லும் போது,

"பனிக்கடலில் பள்ளிகோளை பழக
விடடு ஓடிவந்து
என் மனக்கடலில் வாழவல்ல மாய
மணாளன்"

என்று சொல்லுகிறா. ஆக உப்புக் கடலையே பாாத்து வரும் நம்பூலோக வாசிகளால் பாறகடல் எம்பெருமானைக் கண்டு அநுபவிக்க ப்ராப்தி இல்லை.

மூன்றாவதாக விபவ அவதாரம். இதுதான் தஸாவதாரம் எடுத்தநிலை. இது ஒரு ஸமயம் இராமனாகவும், கணணனாகவும் எம்பெருமான் நம் கூடவே இருந்து ஸேவை தநதிருக்கிறான். ஆழ்வாரும் இதைச் சொல்லும்போது,

"நாட்டில் பிறந்து படாதனபட்டான் மனிதர்க்காக" என்று அநுபவிக்கிறார். இருந்தாலும் இதிலும் நாம் ஏமாந்தோம். அதாவது அவனைக் காணவில்லை. எங்கோ தப்பி ஒளிந்து விட்டோம். ஸ்ரீ வாமனன் மண் அளக்கும் போது நாம் எங்கு இருந்தோமோ தெரியவில்லை. அப்போது இல்லை என்பது மட்டும் நன்கு கூற லாம். எப்படி என்றால் அப்போது அவன் திருவடியின்கீழ் அகப்பட்டிருந்தால் இப்போது நாம் இப்பூலோகத்தில் பிறநதிருக்க வழி இல்லை. ஆகையாலே நம் கண்முன் தோன்றிய எம் பெருமானகளை (இராமன் தசரத சக்ரவர்த்தி குமாரன் எனறும் கணணனை நந்தகோபன் என்று மட்டுமே எண்ணி) மோக்ஷம் வேண்டி கேட்டோமிலலை. சபரி, ஜடாயு, ததிபாண்டன், ப்ரஹ்லாதன் முதலானோர்களே மோக்ஷம் அடைந்தார்கள் என்று தெரிகிறது. மற்றவர்கள் இகப்ரசுகமே வேணடினார்கள். மோக்ஷம் கேட்டவர் யாரும் இல்லை. ஆகவே இதையும் இழந்துவிட்டோம்.

இதையேதான் நம்மழிசை வந்த வள்ளல் சொல்லும்போது,

"அன்று நான் பிறந்திலேன" என்கிறார். "என்னே அதிசயம். மண்மிசை யோனிகள் தோறும் நம் மாதவனே பிறநதாலும், கணணார நின்றாலும் நம்போன்ற ஓர் ஆச்சார்யர் ஒருவன் என்று எண்ணியே நாம் வாளா இருந் தொழிந்தோம கீழ்நாட்களில்" என்கிறார்.

அடுத்து அநதர்யாமி. அநதர்யாமியாக, அதாவது ஒவவொரு வஸ்துக்குள் நிறைந்திருப்பவனாக சாஸ்திரம் கூறுகிறது. இந்த நிலை ஞானிகளுக்கு மட்டுமே உகந்தது. இருநதாலும் சில இடங்களில் அவனே விருமபி இருப்பதுவும் உண்டு. இதை ஆழ்வார்,

---

அடியார்க்கடியவன்.
கேத்தாண்டபட்டி.

---

"மனத்துள்ளான் மாகடல் நீருள்ளான மலரான் தனத்துள்ளான்" என்கிறார். யோகிகள், ஞானிகள் முதலானோர் மனத்துள்ளும், திருபாற்கடலிலும், ஸ்ரீமஹாலக்ஷ்மியினுடைய திருமார்பிலும் அவன ஆசைப்பட்டிருக்கிறான. இது பெரிய மஹான்களாலேயே அடையும் நிலையாக இருக்கிறது. பத்து காயததிரி ஜபம் கூட நிதானமாக பண்ண அவகாசம் இல்லாத நம போனறவர்கள மனத்தால் அவனை எப்படி அறியமுடியும். இதையே ஆழ்வார்கள் வெகு அற்புதமாக ஸாதிக்கிறார்கள்.

"தவத்துள்ளார் தம்மில்லேன் தனம் படைதாரிலலேன்" என்றும், 'குலங்களாகிய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன், நலங்களாக நற்கலைகள்

நாவிலும் நவின்றிலேன், புலங்கள் ஐந்தும் வென்றிலேன்' என்றும், "மனத்திலோர் தூய்மை இல்லை வாயிலோர் இன்சொல் இல்லை" என்றும் நம் போன்றவர்களுக்காகக் குறைபட்டுக் கொள்கிறார்கள். ஆக இதனால் கண்டது அந்தர்யாமியையும் சுத்தமான மனதில்லாதவர்கள் இந்நிலையையும் அடைய வழியில்லை.

இந்த நிலை சகதேவன், உத்தவர், பீஷ்மர், துருவன், ப்ரஹ்லாதன் முதலானவர்களாலேயே அறிய முடிந்தது. ஆக இதுவும் இல்லையெனில் எப்படித்தான் அவனை வணங்கும் வழி எனக் கேட்பீர்.

"பின்னர் வணங்கும் சோதி என நிற்கும் நிலை" அர்ச்சாவதாரம் ஆகும். ஐந்தாவதாக அர்ச்சை. ஆம். அர்ச்சையே நம் போன்ற இப்பூலோக வாசிகள் இக்கலியில் சுலபமாக அவனை அடையும் நிலை. அதைச் சற்று விரிவாகக் காண்போம் இங்கே. நூற்றெட்டுத்திவ்யதேசங்களிலும்மற்றும் முக்தி ஸ்தலங்கள், ஸ்வயம் வ்யக்த்த ஸ்தலங்கள் என்று இப்படியாக பற்பல இடங்களில் பற்பல உருவங்களில் ஸேவை தரும் அர்ச்சை எம்பெருமானே ஸ்ரீய:பதியான ஸர்வேஸ்வரன் அர்ச்சா ரூபத்தில் சுலபமாக ஸேவை தருவான். ஆக அவனை அடைய இதுவே போதுமானது. அடையமுடியாததும் கடந்துவிட்டதுமான நிலைகளை எண்ணி வருத்தப்படாமல் இந்த அர்ச்சையை தரிசனம் செய்து, அவனைப் பாடி, வணங்கி, தொண்டு செய்து, அவன் கதை கேட்டு, அவனைக் கண்ணாரக்கண்டு ஆனந்தித்து இவ்வுலகிலும், மேலுலகிலும் இன்பம் பலபெற்று மோக்ஷமடையலாம்.

ஆழ்வார்களில் சிலர் பரவாஸுதேவ நிலையிலும், வ்யூகத்திலும், அந்தர்யாமியிலும் இரங்கி அனுபவித்தார்கள். நம் கலியன் மட்டும் அதிகமாக ஈடுபட்டது அர்ச்சையிலேதான். நம்மாழ்வார்க்கு இருந்த இடத்திலேயே பல திவ்ய தேசத்தெம்பெருமான்கள் அர்ச்சா ரூபத்திலே ஸேவை ஸாதித்தார்கள். ஆனால் நம் பரகாலன் கால்நடையாகவே நடந்து தெய்வமல்லால் செல்ல ஒண்ணாத இடங்களுக்கும் சென்று, ஒவ்வொரு ஸ்தலத்து அர்ச்சா மூர்த்திகளை நேரில் கண்டு அனுபவித்த வரலாறு நமக்கு அவர்தம் பாசுரம் மூலம் நன்கு தெரிகிறது. மங்கை மன்னனின் அர்ச்சையின் ஈடுபாட்டை மேலே வரும் பாசுரத்தின் மூலம் நன்கு அனுபவிப்போம். அதையே இக்கதையில் கூறுவோம்.

பரகாலன் எம்பெருமான், அழகன் (திவ்ய தம்பதிகள்) அருள்பெற்ற பிறகு மூலமந்திரம் திருவஷ்டாக்ஷரத்தைப் பரக்கப்பேசி உடனே வடதேசமாம் திருப்பிரிதி எம்பெருமானையும், ஸ்ரீ பதரி நாராயணனையும் கிரமமாக நேரில் கண்டு அர்ச்சையை கண்களால் பருகிப் பாடிப்பரவசம் கொண்டு அப்படியே வரிசைக்கிரமமாக சாளக்கிராமம், நைமிசாரண்யம், அஹோபிலம், திருவேங்கடம் ஸேவித்துக் கொண்டு வடநாட்டைவிட்டுத் தமிழ் நாட்டில் ப்ரேவேஶித்து திருஎவ்வுள் கிடந்தான், அல்லிக்கேணி முதலிய திவ்யதேசங்களை எல்லாம் ஸேவித்து முடித்து கிரமமாக சோழ தேசம் சென்று நடுநாடு இரண்டையும் பாடி ஸேவித்துவிட்டு திருச்சித்திர கூடம் வழியாக சீர்காழி சென்று ஸ்ரீ சம்மந்த மூர்த்தி நாயனாரை தம் வாக்கால் வென்று பட்டம் பல தரித்துத் தாடாளனையும் மங்களா ஸாஸனம் பாடி முடித்து, சம்மந்த மூர்த்தி திருப்தியடைந்து அவர் தம் வேலாயுதத்தையும் அடையப் பெற்று மற்றைய திருப்பதிகளை ஸேவித்துக் கொண்டு திருஇந்தளூர் வந்து சேர்கிறார். (இந்த திவ்யதேசம் மாயூரம் பக்கத்தில் (மயிலாடி) 4 பர்லாங் வடக்கில் உள்ளது. அங்குப் பள்ளி கொண்டிருக்கும் வீரசயன எம்பெருமானை ஆர்வமுடன் ஸேவிக்க வந்தார். ஆனால் இவர் வந்ததோ மிகவும் அகாலமான வேளை. கோவிலில் திருவாராதனம் முடிந்து கதவு சாத்தப்பட்டு உள்ளது. வெகு ஆசையுடன் ஸேவிக்க வந்த நம் கலியனுக்கு எம்பெருமான் ஸேவை தராதது கண்டு மிகமிக மனம் வருந்தி, கோபமும் வந்துவிட்டது. பார்த்தார் நம் ஆலிநாடன். 'ஆஹா! என்னே இறுமாப்பு உனக்கு. நீ நல்ல பணக்காரன் போலும்! நிறை ஸேவார்த்திகளும் அவர்கள் மூலம் உண்டியில் பணமும் சேருகிறது. ஆகையால்தான் இந்த ஏழை பக்தனை எளிமைத் தொண்டனை நீ அலட்சியம் செய்துவிட்டு உன் கோயில் கதவு தாழ்ப்பாளையும் போட்டுக்கொண்டாய் என்று தெரிந்து கொண்டேன். உன்னைச் சொல்லி என்னபயன்? சொல்லாமல் இருக்கவும் முடியவில்லை. நான் அறிந்ததைக் கூறுகிறேன், கேள்' என்று கோபத்தினால் ஆழ்வார் வாயில் ஒரு கவி பிறக்கிறது (10 பாசுரங்கள்) (பக்தர்களுக்கும், கவிஞர்களுக்கும், ஒரு சூழ்நிலையில்தான் கவிபாடதானாக வரும் என்று பெரியோர் கூறுவர். அதாவது சோகத்திலும், காமத்திலும், கோபத்திலும் தகுந்தபடி கவிசெய்ய சுலபமாக வருகிறது). இங்கு ஸேவிக்க முடியவில்லையே என்று கோபமே ஆழ்வார்க்கு கவி பிறக்க வழி செய்கிறது. அர்ச்சையில் அவருக்கு அவ்வளவு ஈடுபாடு. பாசுரம் பார்த்து மேலே செல்லுவோம். (பெரிய திருமொழி 4:9:6)

"சொல்லாதொழிய இல்லேன்; அறிந்த சொல்லில்
நும்மடியா[illegible]ல்லாரோடு மொக்க
எ[illegible]யிருந்தீர் அடியேனை
நல்லாரறிவீ[illegible]ரறிவீர் நமக்கு இவ்வுலகத்தில்
எல்லாமறிவீர் ஈதே அறியீர்
இந்தளூரீரே"

'நும் அடியார்கள் எல்லாரோடும் ஒக்க என்னையும் எண்ணிவிட்டீர். அவர்கள் பக்தர்களாக இருக்கலாம். ஆனால் எப்படிப்பட்டவர்கள் என்று

சொல்கிறேன், கேள். அவர்கள் காரியங்கள் நிறைவேற உன்னை வேண்டிப்ரார்த்தனை செய்து கொண்டு போகிறார்கள். போனவர்கள் காரியம் முடிந்துவிட்ட பிறகு உன்னை நினைப்பது அரிது. அப்படி நினைத்தாலும் நீ அனுகூலம் செயது வைத்தாயே அதற்காகவே நன்றிக்கடனாக வந்து உன்னை ஸேவிக்கிறார்கள். ஆனால் அவர்கள் குறை தீராவிட்டால் உன்னைப்பற்றி ஒருவரும் நினைக்கமாட்டாரெனத் தெரிந்து கொள். ஆனால் என்னை யாரென்று சொல்கிறேன், கேள். எனக்கு ஒரு வரமும் உனனிடம் வேண்டாம். நான் எங்கும் யாரையும் பார்த்து ஒன்றும் கேட்டதில்லை. உன் திருவடி ஸேவிப்பதையே முக்கியமாக எண்ணி வந்திருக்கிறேன். ஆக உனனால் எனக்கு வேண்டிய காரியம் ஒன்றும் ஆகவேண்டும் என்பதில்லை. உனக்குத் தொண்டு செய்தல், உன் திருவடி ஸேவை, உன்னைப் பாடவேண்டும், இதற்காகவேதான் நான் வந்தது. இது உனக்கும் தெரிந்திருக்கும் என்று எண்ணுகிறேன். இது தெரியவில்லையென்றால் ஆசசர்யமாக இருக்கிறது.

ஆமாம், யார் யாரோ உனக்குப் பல பட்டங்கள் கொடுத்திருக்கிறார்கள். அதுகண்டு எனக்குச் சிரிப்புதான் வருகிறது. அதாவது நீ சர்வசக்தன் என்றும், ஸர்வேஸ்வரன் என்றும், எல்லாம் தெரிந்தவன் என்றும், எலலோருடைய மனதிலும் அந்தர்யாமியாக இருப்பவன என்றும சாஸ்திரமும், பெரியோர்களும் மற்றும் புராணங்களும் கூறுகின்றன. நன்றாக இருக்கிறது உன் தெரிந்த லக்ஷணம். பலே பேஷ்! உனக்கு நல்லவர்கள் யார், யார் என்பதும், தியவர்கள் யார், யார் என்பதும் எல்லாம் தெரிந்தவர் என்றும் நானும் இதுவரை ஏமாந்து போனேன். இந்த ஒரு சின்ன விஷயம் கூட தெரியாதது கண்டு மிகவும் வருத்தமடைகிறேன்' என்கிறார் மஙகை வேந்தன். என்னே, பாசுரத்தின் கம்பீரமும், கேள்வியும்.

# 32 வகையான குற்றங்கள்

1. வாகனங்கள் மீது ஏறி அல்லது கால்களில் செருப்புக்களை அணிந்து கொண்டு கோயிலுக்குச் சென்று கடவுளை வழிபடுதல்.
2. ரதத் திருவிழா, ஜன்மாஷ்டமி ஆகிய உற்சவங்களைச் செய்யாதிருத்தல் அல்லது அதனுடைய தரிசனத்தைச் செயயாதிருத்தல்.
3. திருமூர்த்தியை தரிசனம் செய்யும்போது வணங்காது இருத்தல்.
4. சுத்தமில்லாத நிலையில் தரிசனம் செய்தல்.
5. ஒரு கையால் வணங்குதல்.
6. கோயிலை வலம் வரும்போது பகவானுக்கு முன்னால் நிற்காமல் மீண்டும் வலம் வருதல் அல்லது பகவானுக்கு முன்னாலேயே வலம் வருதல்.
7. பகவானின் உருவத்திற்கு முன்னால் காலை நீட்டிக்கொண்டு உட்காருதல்.
8. பகவானின். உருவத்திற்கு முன்னால் கால் முட்டிகளை உயர்த்தி கைகளைக கோர்த்துககொணடு உட்காருதல்.
9. பகவானின் உருவத்திற்கு முனனால் உறங்குவது.
10. பகவானின் உருவத்திற்கு முன்னால் சாப்பிடுதல்.
11. பகவானின் உருவத்திற்கு முன்னால் பொய் பேசுதல்.
12. பகவானின் உருவத்திற்கு முன்னால் உரக்கப் பேசுதல்.
13. பகவானின உருவத்திற்கு முன்னால் தங்களுக்குள் உரையாடுதல்.
14. பகவானின் உருவத்திற்கு முன்னால் கத்துதல்.
15. பகவானின் உருவத்திற்கு முன்னால் கலகம் செய்தல்.
16. பகவானின் உருவத்திற்கு முன்னால் யாருக்காவது துன்பம் கொடுத்தல்.
17. பகவானின் உருவத்திற்கு முன்னால் யாருக்காவது இரக்கம் காட்டுதல்.
18. பகவானின் உருவத்திற்கு முன்னால் யார் மீதாவது கடுமையான சொற்களைச் சொல்லுதல்.
19. பகவானின் உருவத்திற்கு முன்னால் கம்பளியினால் போர்த்துக் கொள்ளுதல்.
20. பகவானின் உருவத்திற்கு முன்னால மற்றவரைப் பற்றித் திட்டுதல்.
21. பகவானின் உருவத்திற்கு முன்னால் மற்றவரைப் புகழ்தல்.
22. பகவானின உருவத்திற்கு முன்னால் கெட்ட சொற்களைச் சொல்லுதல்.
23. பகவானின் உருவத்திற்கு முன்னால் அபான வாயுவை விடுதல்.
24. 'செய்ய முடியும்' என்ற நிலை இருந்தும் சாதாரண உபசாரங்களினால் பகவானுக்குப் பூஜை செய்தல்.
25. பகவானுக்கு நிவேதனம் செய்யாமல் முதலிலேயே சாப்பிட்டு விடுதல்.
26. எநத பருவத்தில் எந்தப் பழம் கிடைக்கிறதோ அதை பகவானுக்கு அர்ப்பணிக்காமல் இருப்பது.
27. ஏதாவது காய் அல்லது கனியின் முன்பாகத்தை வெட்டி எடுத்து பகவானுக்கு உணவாகப் படைத்தல்.
28. பகவானின் உருவத்திற்கு முன்னால் முதுகு புறத்தைக் காட்டுதல்.
29. பகவானின் உருவத்திற்கு முன்னால் வேறு எவரையாவது வணங்குதல்.
30. குருவை வணங்காது இருத்தல், அவருடைய க்ஷேம-லாபத்தை விசாரிக்காமல் இருத்தல், அவரைப் புகழாமல் இருத்தல்.
31. தன் வாயால் தன்னைப் புகழ்தல்.
32. எந்த தெய்வத்தையாவது திட்டுதல்.

**ஆதாரம்: ஸ்ரீமத் பாகவதம்.**
**தொகுப்பு: தி. வி. பார்த்தசாரதி.**

மற்றும் ஒனறு சொல்கிருர். 'ஓய். இந்தளூர் எம்பெருமானே! தேசமெல் லாம சுற்றி அர்ச்சையில் ஈடுபட்டு ஸேவிக்கும் எனக்கு நீர் ஸேவை தரா விட்டால் கதவே இல்லாமல் திறந் திருக்கும் கோயில் பல உணடு என் பதையும் நன்கு தெரிந்து கொள்ளும். உம்முடைய அழகையும், ஆபரணத் தையும், எம்பெருமாட்டியின் அழகை யும் எம்போன்ருேர் ஸேவிக்காமல் எதற்கு வைததிருக்கிறீர் என்று தெரியவில்லை ஆக நான போகிறேன். நீரே சுகமாக வாழ்நது போம்!' என்று சொல்லி ஆழ்வார் திரும்பி விட்டார். இந்த இடம் மிகவும் ரஸம். அதாவது விசுவாமித்திர முனி வர் தசரதனிடம் இராமனை வேண்டி யாசகம் கேட்டு அவர் இராமனைப் பிரிய மனமிலலாமல், கொடுக்க முடி யாமல் தவிர்த்த போது இதே கோபத் துடன் இருந்த முனிவர், 'தசரதா, இராமனை அனுப்பவேணடாம், நான் போகிறேன். நீ சுகமாக வாழ்ந்து வா' என்று சொன்னதை இங்கு நினைகக மிகவும் பொருத்தமாகவும் மிகவும் ரஸமாகவும் இருக்கிறது.

உடனே ஆழ்வார் வெளியேற எத் தனித்த ஸமயம் எம்பெருமான் 'கன் றினைப் பிரிந்த தாயப் பசுபோல்' கதவுகளெல்லாம் திறக்கச் செய்து, 'ஆழ்வீர், இதோ என்ன நன்கு ஸேவி யும்' என்று தன் ஸேவையை ஆழ் வார்க்கு அருளினுராம். 'ஆம் ஆழ் வீர்! இவ்வளவு கோபம உமக்கு வர விலலை என்றுல் இநத மதுரமான பாசுரத்தை எப்படி நானும் மறற வர்களும் என் பக்தர்களும கேட்க இயலும். அதற்காகவேதான் இநத சோதனை கொடுத்தேன், பொறும்' என்று ஆழ்வாரைக் கட்டி அணைத்து உச்சி முகந்து கடாக்ஷித்தருளினுர். எம்பெருமாட்டியும் இக்காக்ஷியைக் குளிரக் கண்டுகளித்து ஆனந்த பரவச மடைந்தாள்.

ஆக ஆழ்வாரைப்போல் தொண்டு செய்து நன் மனத்துடன அவனை ஸேவித்து அனுபவிப்பதற்கே நமக்கு அர்ச்சையில் எம்பெருமான் இன்றளவும, இப்பார் உள்ளளவும் ஸேவை தந்து வருகிருன. இதையெல்லாம் பார்க்கும்போது இக்கலியில நம் போன்றவர்கள் அர்ச்சையையே ஆராதித்து கைங்கர்யஙகள் பல செய்து மோக்ஷமடைய வழி தேடிக் கொள் வோம். இநத அனுபவம் வைகுண டத்திலும் முடியாது என்கிருர் மற் ருெரு ஆழ்வார்.

இங்கு என்றுல் அர்ச்சையை நம இஷ்டப்படி உறசவாதிகள் பணணி அனுபவிகக முடியும். (வைகுந்தத் திலோ என்றுல் சேனை முதலிகளின் உத்தரவுபடியே கைங்கர்யம் செய்ய முடியும). இதைத்தான்,

''இச்சுவை தவிர யான் போய் இந்திர
லோகமாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்''

என்றும்,

''நின் புகழில் வைகும் தம் சிந்தை
யிலும் மத்தினிதோ
நீ அவர்க்கு வைகுந்தம்
என்றருளும் வான்''

என்றும பலபடியாக அனுபவிக்கிருா கள. அர்ச்சையே எல்லோரும் காணும் நிலை. அதுவே நம் துயரைத் தம் தரிசன மாத்திரத்தால் போக்கிப் பெரிய வீடுவரை அழைத்துப் போகும்.

ஆர்ச்சையில் நம் இஷ்டபபடி எப் படி ஸேவிப்பது எனில் இராமனுக ஸேவை கொடுக்க வேண்டுமென்றுல, அவர் கையில் ஒரு வில், அமபு கொடுத்து (உபயநாச்சிமார்களை) இலக்குவனுகவும், சீதாபிராட்டியாக வும் ஆக்கி ஸேவிக்க முடியும். கண் ணனுக என்றுல் அவன் தன் திருக் கால்களை ஒன்றன்மேல் ஒன்றுக வைத்து மாடு மேய்க்கும் திருக் கோலத்தில் ஒரு புல்லாங்குழலை கை யில் கொடுத்துவிட்டால் கருங்கண தோகை மயில் பீலியும் அளித்துவிட் டால் கொள்ளை அழகனுக இருப்பார். அவனையே அரங்கனுக ஸேவிக்கப் ஆசைப்பட்டால் அந்த அர்ச்சா மூர்த்தியையே ஸயனத திருக்கோலத் தில் எழுந்தருளப் பணணித தலைமாட் டில் கையையும், உந்தித் தாமரை யும், பக்கத்தில் இலககுமியை இருக்கச செய்துவிட்டால் அவனே அழகிய மணவாளனுக ஸேவை தருவான். வைகுண்ட வாசனுக ஸேவிகக வேண்டு மெனில் அமர்ந்த திருக்கோலத்தில் ஆதிசேஷனை தலைக்குமேல இருத்தி இருபுறமும பூமகளும, பார்மகளும் தோன்ற வைகுண்ட திருக்கோலத்தில் நன்கு ஸேவிக்கலாம். மற்றும் மோக னுங்கியாகவும் (பெண உருவமாகவும்) பலபடியில் இங்கு அர்ச்சை யில் நம் போன்றவர்கள் சுலபமாக கண்குளிரக் கணடு ஆனநதமடைய லாம். அவனை அவன் உருவத்தை யாரால் பூர்த்தியாக எழுத இயலும.

ஆக அர்ச்சையில் அவன் திருவடித் தாமரையில சரணுகதி பண்ணி இரு வினைகளையும களைந்தொழிந்து அடைய முடியாததான பரமபத ஸேவையை இக்கலியில் சுலபமாக அடைந்தேறலாம். என்னே அர்ச்சை யின் ஆனநத அனுபவம். வாழ்க அர்ச்சாமூர்த்தி! வாழ்க அவன மங்கள உருவம்.



# குலசேகரப் பெருமாளின் பெருநெறி



அரசராய்ப் பிறந்தார் அகிலம் ஆள்வது இயற்கை. ஆனுல் ஆணடவனுக்கு அடியாராகி அடியார்த் திலகமாவதோ வெகு அருமை. அத்தகு அருமைப்பாடுடையவராய்- அயோததிராமனிடம் ஆழங்கால் பட்ட அன்புடைமையால் 'குலசேகரப் பெருமாள்' என வழங்கப்பெறும் பெரும் பேறுடையவராய்-பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராய் - சேரர் குலம் தழைக்க வந்த தன்மையால் 'குலசேகரன்' என்னும் இயற்கைத் திருநாமம் பெற்றவராய் - ''பெருமாள் திருமொழி'' என்ற திவ்விய பிரபந்தம் அருளிய ஸ்ரீ குலசேகராழ்வார் விளங்குகின்ருர்.

அவர் கலியுக ஆரம்பத்தில் பராபவ வருடம் மாசி மாத புனர்வசு கூடிய நன்னுளில் சேரர்குல மாமன்னன் த்ருடவ்ரத மகாராஜனுக்கு மகவாய்த் தோன்றினுர். குழந்தைப் பருவத்தில் கண்டார்க்குக் களிப்பருளும் கவின் கடலாய் விளங்கியவர். இளவரசரானதும் சென்ற திக்கெங்கும் உள்ள வேந்தரை வென்று ''கொல்லிக் காவலன் கூடல் நாயகன் கோழிக்கோன் குலசேகரன்'' எனும் விருதினைப் பெற்று சிறப்புற்ருர். தக்க பருவத்தே அரசாட்சியை அன்புத் தந்தையார் அக மகிழ்ந்து தரப் பெற்று, தக்காள் ஒருத்தியின் கைத்தலம் பற்றி இல்லற இன்பமும் இனிது நுகர்ந்தார். அவருக்கு த்ருடவ்ரதன், இளை, சேரகுலவல்லி என்போர் குலம் விளங்கத் தோன்றினர்.

குலசேகரருக்கு அரசாட்சியும், மனை வாழ்க்கையும் மன நிறைவைத் தந்து விடவில்லை. 'பிறப்பெடுப்பார் எய்தலாகும் பெரும் பேறென்ன?' என்று எப்போதும் சிந்திக்கலானுர். அச்சிந்தனையின் கருப் பொருளாய்- முன்னைக் காட்டாதன காட்டியருளும் கருணை விளக்காய்-ஸ்ரீராமனும், கிருஷ்ணனுமாய எம்பெருமாள் விளங்கினன். அப்பரமனின் பாதம் பற்றி, பரமபதம் அடைந்து, எந்நாளும் அவனது நித்ய கல்யாண் குணங்களில் ஈடுபட்டுக் கிடப்பதே யாவரும் உய்யும வழி எனத் தேர்ந்தார். அவ்வுயரிய வழியில் தம் மனத்தைச் செலுத்தியவராய் திருவரங்கம, திருவேங்கடம், திருக்கண்ணபுரம், திருச்சித்திரக்கூடம், திருவித்துவககோடு முதலிய திருத்தலங்களில் கோயில் கொணடருளும எம்பெருமான்களிடம பக்தி வயப்பட்டவரானுர்.

அவருடைய ர்ாம பக்தி அளவிடற்கரியதாகும். இராமாயணச் சொற்பொழிவைக் கேட்கும்போதெல்லாம் அக்காவிய காலத்திற்கே அவர் மனம் சென்று விடும். இராமனின் சமகாலத்தவராக தம்மை நினைத்துக் கொள்வார். இராமனுக்கோர் இடுக்கண் நேரக் கேட்டால், தாம் வாளா இருப்பது அழகல்ல என்று இராம கைங்கரியம் செய்யத் துடிததெழுவார். எடுத்துக்காட்டாக, மூக்கறுபட்ட சூர்ப்பணகையால் தூண்டப்பட்ட பதினுலாயிரம் அரக்காகள் தனித்திருக்கும் இராமனேடு சண்டைக்கு வந்ததாகக் கூறக் கேட்டபோது, இராமனுக்குத் துணையாகச் செல்லுமாறு தம் படையினரை ஏவி தானும் போர்க்கோலம் பூண்டு புறப்படத் தயாராகி விட்டாராம் குலசேகரர். இராமாயணச் சொற்பொழிவாளர் நிலைமையைப் புரிநது கொண்டு, 'இராமபிரான் பதினுலாயிரம் அரக்கரையும் கொன்றுக் குவித்து சீதாபிராட்டியாரோடு மகிழ்ந்திருந்தான்' என்று அவசர அவசரமாக கூறி முடிக்கவே, குலசேகரரும் தம் போர்க்கோலம் தவிர்த்துப் படையெடுப்பையும நிறுததினுராம்.

திரு. வே. சோமசுந்தரம் — சென்னை.

அவ்வாறே, இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றதைக் கேட்டதும் குலசேகரம் ''உடனே சேனையோடு செனறு இராவணனைக் குலத்தோடு தொலைத்து விடுகிறேன்'' என்று கிளம்பி விட்டாராம. உடனே கதை சொல்லி வந்தவர், வீரராகவன் இலங்கையில் நடந்த அரிய போரில் இராவணனை அம்பால் வீழ்த்தியதையும், சீதையை அடைநது சீதா ராமனுக அயோததி திரும்பியதையும், அரசாட்சியை ஏற்று ராஜாராமனுக வீற்றிருந்ததையும் வேகவேகமாகச சொல்லி முடித்தாராம். குலசேகரரும் தம் படையெடுப்பை மீண்டும் நிறுத்திக் கொண்டாராம்.

அவருடைய ராம பக்தியைப் போலவே மிக் உயர்ந்ததாயிருந்தது, அவருடைய பாகவத பக்தி. எம் பெருமானின் அடியார்களுக்காக எதையும் செய்யத் தயாராக இருந் தார் குலசேகரர். இதைக் காணப் பொறுக்காத அவருடைய அமைச்சர் களில் சிலர் அரண்மனையிலிருந்த முத்துமாலையொன்றைத் திருடியதாக பாகவதர்கள் மீது பழிசுமத்தினர். அதைக் காதால் கேட்கவும் பொறுக் காத குலசேகரர் 'திருமாலடியார் திருடும் தொழில் புரியார்' என்று உறுதிமொழி கூறி அதனை நிரூபிக் கும் வகையில் கொடிய விஷப்பாம் புள்ள குடமொன்றை வரவழைத் தார். "திருமாலடியார் திருடியது உண்மையாகில் இப்பாம்பு என்னைத் தீண்டும், அன்றேல் வாளா இருக் கும்" என்று சொல்லி தம் கையை குடத்தினுள் விட்டார். பாம்பு அவரை ஒன்றும் செய்யாமல் இருந் தது. உடனே பொய்யுரைத்த அமைச்சர்கள் தம்மை மன்னிக்க கோரியதுடன் கழுவாயாக அடியார் பணி செய்யும் திருந்திய வாழ்க்கை யில் குலசேகரரின் ஆணைப்படி ஈடு படலாயினர். இந்நிகழ்ச்சியினை மணக்கால் நம்பியின்,

"ஆரம் கெடப்பர னன்பர்கொள் ளாரென்று அவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பிற் கையிட்டவன்"

என்ற பாடலடிகள் வாயிலாக நாம் அறிந்து கொள்ளலாம். குல சேகரருக்குத் திருவரங்கனைச் சென்று சேவிக்கும் ஆர்வமும் அதிகமாயிருந் தது. ஆனால் அவருடைய மந்திரி களோ அதற்குத் தடையாக இருந்த னர். 'மன்னர் திருவரங்கனைத் தரி சிக்கச் சென்றால் எங்கே மீண்டும் அர சாட்சிக்கு வராமலே அடியாராய்ப் போய் விடுவாரோ' என்றஞ்சிய அவர்கள் குலசேகரர் திருவரங்கத் திற்குச் செல்ல நிச்சயித்த நாளி லெல்லாம் திருமாலடியார்களை அவ ரிடம் வரச் செய்தனர். 'ஆண்ட வன் தரிசனத்தை பிறகு வைத்துக் கொள்ளலாம்; அடியார் தொண்டே உயர்ந்ததென்று' அவர்களை உபசரிப் பதிலும் அவர்களுக்குத் தேவையான தொண்டுகளைச் செய்வதிலும் ஈடுபட் டார் குலசேகரர். இவ்விதமே பல முறை அவரைத் திருவரங்கம் செல்ல விடாது தடுத்த அமைச்சர்களால் இறுதிவரை வெற்றி பெற முடிய வில்லை. தம் மகனுக்கு அரச பதவி யளித்த குலசேகரர் திருவரங்கம் சென்று தம் மகளார் சேரகுலவல் லியை அவ்வழகிய மணவாளனுக்கே மாலையிடச் செய்து மகிழ்ந் தார். பிறகு பல புண்ணிய தலங் களிலும் எழுந்தருளியுள்ள எம்பெரு மான்களைச் சென்று சேவிப்பதில் காலத்தைக் கழித்தார். தமது அறு பத்தேழாவது வயதில் மண்ணுல கைத் துறந்து மாயோன் உலகைச் சேர்ந்தார்.

குலசேகரர் இயற்றியருளிய பெரு மாள் திருமொழி அவருடைய அனு பவ சாரமாகும். பத்து திருமொழி களாக பகுக்கப் பெற்றுள்ள அதில் மொத்தம் நூற்றைந்து திருப்பாடல் கள் இடம் பெற்றுள்ளன.

முதல் திருமொழியில், குலசேகர ரின் திருவரங்கனைக் கண்டு களிக்க ஆசைப்படும் நெஞ்சத் துடிப்பானது வெளிப்படுகிறது. காண்பதோ டன்றி அம்மாயோனை வாயார வாழ்த்தவும், அலர்களிட்டு அம்மான் தனடியிணைக் கீழ் அடியவரோடு அணுகி கைகூப்பி வணங்கவும், கம லக்கண்ணும், ஒளிமதிசேர் திருமுக மும் கண்டுகொண்டு தம் உள்ளம் மிக உருகி கண்கள் நீர் மல்க நிற்க வும், மாலோனோடு இன்பக் கலவி யெய்தி வல்வினை நீங்கி வாழ்வெய்த வும், போராழியம்மானைக் கண்டு துள்ளிப் பதலத்தில் புரளவும், அடி யார் தங்கள் இன்பமிகு பெருங் குழுவுகண்டு தானும் இசைந்து உடன் இருக்கவும் விருப்புற்றுக் கேட்கிறார் குலசேகரர். அவ்வாறு தாமிருக்கும் நாளே தாமுய்ந்த நாள் என்கிறார். 'அந்நாள் என்று வருமோ?' என்று ஏங்கவும் செய் கிறார். பரந்தாமன் பக்தியிலும், பர மனடியார்த் திருத்தொண்டிலும் நிலைத்த மனமுடையவராகிய குல சேகரரின் வாழ்நாளெல்லாம் அவ் வாறாகக் கழிந்த உயரிய நாட்களே. ஆனால் நம்மைப் போன்ற திருமாலி டத்து புதிதாக நெஞ்சம் செல்லத் தலைப்பட்டவர்கள் எவ்வாறாக தம் வாழ்நாளை கழித்தல் வேண்டும் என காட்டுவதற்காகவே தம் நெஞ்சத்து ஏக்கம் போல நம்மிடத்து எழ வேண் டிய ஏக்கத்தினை வெளிப்படுத்திக் காட்டியுள்ளார்.

இரண்டாம் திருமொழியில் திருவ ரங்கனின் திருத்தொண்டர் தம் தன்மை எடுத்தியம்பப்படுகிறது. அம் மெய்யடியார்கள் தென்னரங் கனை வாழ்த்தி மால்கொள் சிந்தை யர்; ஆட்டமேவி யலந்தழைத்து அயர்வெய்தும் தன்மையர், நாத்த ழும்பெழ நாரணாவென்றழைத்து மெய் தழும்பத் தொழுது ஏத்தி இன்புறும் சொல்லினர்; தென்ன ரங்கனும் மெய்ச்சிலைக் கருமேக மொன்று தம் நெஞ்சில் நின்று திக ழப் போய் மெய் சிலிர்ப்பவர்; தீதில் நன்னெறி காட்டி எங்கும் திரிந்து அரங்கனெம்மானுக்கே காதல் செய் தொண்டர். அத்தகைய அடியார் களுடைய திருவடியிற் காணும் தூசு களில் மூழ்கி எழுவதே பெரும் பேறெனக் கருதுகிறார் குலசேகரர். அது கங்கை நீரோட்டத்திலும் உயர் வுடையதென்று சொல்கிறார். இங்கே குலசேகரரின் அடியார்க்கடி யாராகும் பணிவுத் தன்மையும், அடி யார்தம் அடிக்கேவல் செய்வதே பெரும் பாக்கியம் என்ற உண்மை யும் வெளிப்படக் காணலாம். அத் தகைய உயரிய உண்மை கூறும் பாடல் இதோ:

"தோடு லாமலர் மங்கை தோளிணை
தோய்ந்த தும்சுடர் வாளியால்
நீடுமாமரம் செற்ற தும்நிரைமேய்த்த
தும்இவையே நினைந்து

ஆடிப்பாடி அரங்கவோ? என்
றழைக்கும் தொண்டரடிப்பொடி
ஆடநாம பெறில கங்கைநீர்குடைந்
தாடும் வேட்கையென் னாவதே? ''

மூன்றாம் திருமொழியில் இவ்வுலக வாழ்க்கையில் காணலாகும் மெய் யற்ற தன்மை புலப்படுத்தப்படு கிறது. மாலிடத்து மையல் கொள் வதே மெய்யான வாழ்வென விளக் கப்படுகிறது.

நான்காம திருமொழியில் குலசேக ரர் திருவேங்கடமலையில் ஏதேனுமாக பிறப்பெடுப்பதே பெரும் பேறென விரும்பி வேண்டுகின்றார். திருவேங் கடமலை திருமால் கோயில் கொண் டுள்ள மலை. பரம பதத்திற்கு ஈடான சிறப்புடைய மலை. அதன் கண்ணுள்ள ஒவ்வோர் அணுவும் ஆண்டவனின் அருள் மழையில் மூழ் கித் திளைக்கும் பேறு பெற்றதாகும. எனவே குலசேகரர் திருவேங்கடத் தில் குருகாகவோ, மீனாகவோ, பொனவட்டில் சுமப்பானாகவோ, செண்பகமாகவோ, தம்பகமாகவோ, பொற்குவடாகவோ, கானாறாகவோ, நெறியாகவோ, படியாகவோ, ஏதே னுமாகவோ ஆகிக் கிடக்க விரும்புவ தில் வியப்பில்லை அன்றோ? அதிலும், அவா படியாய்க் கிடந்து பரமனின் பவளவாய்க் காணத் துடிக்கும் ஆசைத்தான் எத்துணை உயர்ந்தது!

'' செடியாய வல்வினைகள் தீர்க்கும்
திருமாலே!
நெடியானே! வேங்கடவா! நின்கோயி
லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பை
யரும் கிடந்திய் ங்குமலா
படியாய்க் கிடந்துஉன் பவளவாய்
காண்பேனே ''

என்ற அவருடைய ஆசையை நிறைவேற்றி வைப்பதேபோல் பெரு மாள் கோயில்களில் இறைவனின் திருமுன்புள்ள வாயிற்படி ''குலசேக ரன் படி'' என்று வழங்கப்படுகிறது.

ஐந்தாம் திருமொழி, அடியார் களுக்கு ஆண்டவனே கதியான தன்மைப் பற்றி பேசுகிறது. அடியார் கள் இறைவன் பேரில் கொண்ட அன் பானது, 'அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள் தன் அருள் நினைந்தேயழும் குழவி'யினுடைய தைப் போன்றது; 'கண்டாரிகழ் வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானை யல்லால் அறியாக் குல மகளின்' உறுதிப்பாடு உடையது. இத் திருமொழியின் கண்ணுள்ள ஒரு பாடல் வாழ்க்கைத் தத்துவத்தை விளக்குகிறது. இறைவன் உயிர் களுக்கு சோதனைகள் தருகின்றான். அவையாவும் மருத்துவனின் அறுவை சிகிச்சைக்கு ஒப்பானவை. அவை நம்மிடத்துள்ள புன்மைகளைப் போக்கி நன்மை பயப்பவை. நாம் செய்ய வேண்டியதெல்லாம், அச் சோதனைகளைப் பொறுத்துக்கொண்டு ஆண்டவன்பால் மாறாத அடிமைத் திறம் பூணடொழுகலேயாகும். அத்தகைய அடியாளாய்த் தாம் இருப்பதாகக் கூறுகிறார், குலசேகரர். அவர்தம் வாய்மொழியைக் கீழே காணலாம :

'' வாளால் அறுத்துச் சுடினும்
மருத்துவன்பால
மாளாத காதல்நோ யாளன்போல
மாயத்தால்
மீளாத் துயர்தரினும் வித்துவக்
கோட்டம்மா! நீ
ஆளா உனதருளே பார்ப்பன் அடி
யேனே! ''

ஆறாம் திருமொழியானது கண்ண னிடம மனதைப் பறிகொடுத்த ஆய்ச்சியா அவனது லீலைகளைச் சொல்லி ஊடல கொள்வதாக அமைந்துள்ளது

ஏழு, எட்டு, ஒன்பது ஆகிய மூன்று திருமொழிகளும் புகழ் வாய்ந் தவை கண்ணனது குழந்தைப் பருவ திருவிளையாடல்களைக் காணக் கொடுத்து வைக்காத தேவகியார் தனனுடைய தவக் குறைவை எண் ணிப் புலம்பி அழுவதாக ஏழாம திரு மொழி அமைந்துள்ளது.

'' ஆலை நீள்கரும் பன்னவன் தாலோ
அம்பு யத்தடங் கண்ணினன்
தாலோ
வேலை நீர்நிறத் தன்னவன் தாலோ
வேழப் போதக மன்னவன்
தாலோ
ஏல வார்குழ லென்மகன் தாலோ
என்றென் றுன்னைஎன் வாயிடை
நிறைய
தாலொ லித்திடும் திருவினை யில்லாத்
தாய ரில்கடை யாயின தாயே ''

என்ற பாடலுக்கு மயங்காதவர் யார்? பாடலின் இறுதியில் தேவகி யாருக்காக இரங்கி கண்ணீர் விடா தார் யார்?

எட்டாம் திருமொழியில் சோக மில்லை; இன்பப் பெருக்கெடுக்கும் தாலாட்டே ஒலிக்கிறது. இராம பிரானை ஈன்றெடுத்த கௌசலை யாரின் தாலாட்டுப் பாடல்களாக அவை அமைந்துள்ளன. கௌசலை யார் தேவகியாரைப் போல ஈன்ற மகவைப் பிரிந்திருந்தவரல்லர். அரு மந்த மகனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டிச் சீராட்டிப் பாராட்டி மகிழ்ந்த பேறுடையவர். எனவே அவர் வாய்மொழியான தாலாட்டுப் பாடல்கள் அனைத்தும கற்கண்டாய் இனிக்கின்றன. இப்பாடல்களை நோக்கும்போது ஒருகணம் குழந்தை இராமனைத் தாலாட்டும் தாய் கௌ சலையா? அல்லது குலசேகரரா? என்ற சந்தேகம் எழாமல் போகாது. ''மன்னுபுகழ்க் கௌசலைதன் மணி வயிறு வாய்த்தவனே'' என்ற அடியா னது நமது சந்தேகத்தை உறுதிப்படுத் துகிறது ஏனென்றால் கௌசலை பாடுவதானால் 'மன்னுபுகழ்க் கௌசலை....' என்று தன்னைத் தானே புகழ்ந்து பாடியிருக்க முடி யாது.

ஒன்பதாம் திருமொழியில் மீண் டும் சொல்லொணா சோக வெள்ளம பாய்ந்தோடக் காண்கிறோம். இராமன் காட்டுக்குச் சென்றானென அறிந்தபோது தசரதன் பட்ட

பாடலை வால்மீகியும், கம்பனும் சொல்லாமலில்லை. ஆனால் குலசேகரர் இங்கே படைத்துக் காட்டும் தயரதன் ஒரு பெண் பிள்ளையைப் போல தன் மைந்தனின் அருமைப் பெருமைகளையும், கைகேயியின் சொற்கேட்ட தன் மனத்தின் கொடுமையையும் சொல்லிச் சொல்லி அழுகிறான். அவன் அழுகையில் நம் நெஞ்சக் கனக்கல்லும் கரைந்துருகி தயரதனின் மகப் பாசத்தின் மேன்மையையும், இராமபிரானின் பெருமைகளையும் உணர்ந்து வியக்கிறது. எடுத்துக்காட்டாக, கீழ்வரும் பாடலில் தயரதன் தன் மகன் இராமன், 'தன்வல்வினையைக் களைந்து மனமுருக்கும் வகை கற்றவன்; கானகம் சென்று கல்லையே அணையாகக் கொண்டு துயிலக் கற்றிருக்கிறானோ?' என்று சந்தேகம் கொள்கிறான். ஒரு சிறந்த மகனிடம் தந்தையானவன் கொண்டுள்ள பாசப்பரிவைக் காட்டும் உயரிய பாடல் இதோ :

" கொல்லணைவேல் வரிநெடுங்கன்
கௌசலைதன் குலமதலாய்!
குனிவில் லேந்தும்
மல்லணைந்த வரைத்தோளா! வல்
வினையேன் மனமுருக்கும் வகையே
கற்றாய்
மெல்லணைமேல் முன்துயின்றாய்
இன்றுஇனிப்போய் வியன்கான
மரத்தின் நீழல்
கல்லணைமேல் கண் துயிலக் கற்
றனையோ? காகுத்தா! கரிய
கோவே! "

பத்தாம் திருமொழி இராமாயணத்தின் சுருக்கமாக அமைந்துள்ளது. 'தில்லைநகர் திருச்சித்ரகூடந் தன்னுள் கோயில் கொண்டுள்ள எம்பெருமான் இராமனே; அவனை நாளும் இறைஞ்சினால் உய்யலாம்' என்கிறார் குலசேகரர்.

குலசேகரரின் நெறி மனம், மொழி, மெய்களால் பரமன் வழிபாட்டில் ஈடுபட்டு உயர்வடையும் நெறியாகும். குலசேகரர் இறைவனின் புகழை வாயாரப் பாடியுள்ளார். இயன்றவரை இறையடியாரைப் போற்றி ஒழுகியுள்ளார். இராமனிடம் எல்லையற்ற பக்தி பூண்டிருந்தார். எம்பிரான் திருக்கோயில் வழிபாட்டில் தலைப்பட்டிருந்தார். 'எம்பெருமானே எல்லாம்' என்று வாழ்ந்து காட்டியுள்ளார். அவர் நெறி வைணவம் தழைக்க வந்த செந்நெறி; மண்ணுலகோரை வாழ்விக்க வந்த பெருநெறி. அவர் வழியைப் பின்பற்றிச் சென்று, அவருடைய "பெருமாள் திருமொழி"யில் தோய்ந்த மனத்தினராய் வாழ்ந்தால் நாமனைவரும் நாரணனின் அருளுக்கு உரியவராகலாம்.

★



ஸ்ரீ லக்ஷ்மீஹயக்ரீவ ஸ்வாமி. மூலச் சித்திரம் : திரு. ஏ. கிருஷ்ணராவ்.



பிட்சாடனர் (சுதையுருவம்) மார்க்கசகாயர் கோயில்—விரிஞ்சிபுரம்

# பிட்சாடனர்

உலகம், உயிர், தெய்வம் என்ற மூன்று உண்மைகளை அனைவரும் ஏற்றுக் கொள்கின்றனர். இவற்றுள் முற்றுணர்வும், முடிவிலா ஆற்றலும் கொண்டு, அனைவருக்கும் பொதுவாகவும், அவரவர்க்குச் சிறப்பாகவும் அருள்புரியும் தன்மை தெய்வத்திற்கு உண்டு. உருவமும், பெயரும் இல்லாத அந்த இறைவனை அவரவருக்கு ஏற்ற பொருளிலும், உருவிலும் மக்கள் வழிபட்டு வருகின்றனர். இக் கருத்தையே மாணிக்கவாசகரும்,

"ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்
லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம்
கொட்டாமோ"

என வலியுறுத்துகிறார்.

பஞ்சபூதங்களுள் ஒன்றான நீர் பல வடிவங்களைப் பெற்றுள்ளது. நீராவியாக உள்ளபோது அது கண்களுக்குப் புலப்படாத அருவப்பொருளாகிறது. அது பனிக்கட்டியாக மலையில் உறையும்போது வெண்ணிறமும், வடிவமும் கொண்டு உருவப் பொருளாகிறது. கடலில் நீல நிறத்துடனும், கிணற்றில் கரிய நிறத்துடனும் அது காட்சியளிக்கிறது. மழை நீர், கடல்நீர், சேற்றுநீர், கேணி நீர், ஆற்று நீர் என்று பல நிலைகளில் அது தோன்றுகிறது. ஒரே பொருள் இவ்வாறு பல பாங்குகளில் புலப்படுகிறது. தெய்வமும் இத்தகைய தன்மையை உடையது. உலகமாகவும், உலகத்தினுள்ளும், அதனைக் கடந்தும் உள்ள அநத மெய்ப்பொருள் 'சத்' எனப்படுகிறது. அதுவே உணர்வுடைய சித்தாகவும், இன்பமுடைய ஆனந்தப் பொருளாகவும் விளங்குவதால் 'சச்சிதானந்தம்' என அழைக்கின்றனர்.

ஒரு நாமமோ, ஒரு உருவமோ இறைவனுக்கு இல்லை. 'இன்னவுரு இன்னநிறம் என்று அறிவது ஏல அரிது' என்பது திருஞான சம்பந்தர் கூற்று. எண்ணற்ற கோலங்களையும், வண்ணங்களையும் உடையவனாக அவனை மக்கள் காண்கின்றனர் இக்கருத்தினையே நம்மாழ்வாரும் ஆமோதிக்கிறார்.

"வணங்கும் துறைகள் பல பலவாக்கி
மதி விகற்பால
பிணங்கும சமயம் பல பலவாக்கி
அவையவை தோறு
அணங்கும் பல பலவாக்க, நின்
மூர்த்தி பரப்பி வைத்தாய்"

ஒருவனே பலவாகிநின்ற இத்தத்துவத்தை மாணிக்கவாசகரும்,

"வேறு வேறு உருவும வேறு வேறு
இயற்கையும்
நூறு நூறுயிரம் இயல்பின தாகி"

என்று விளம்புகிறார். எல்லாப் பொருட்களையும் கடந்துநிற்கும் பரம்பொருளை 'பரப்பிரம்மம்' என்று வேதாந்தம் குறிப்பிடுகிறது. அதே பொருளைச் சிவன் என்று சைவர்கள் வணங்குகின்றனர்.

திரு. எம். இராஜகோபாலன்,
சென்னை-90.

சிவன் என்ற சொல் அப்பரம்பொருள் நம்முடன் தொடர்பு கொள்ள எடுத்த திருக்கோலமும், அத்திருக் கோலத்தைக் குறிக்கும் திருநாமத்தையும் சுட்டும். தன் நிலையில் பெயரோ, வடிவமோ இல்லாத பரம்பொருள், நாம் அப்பொருளை அடைய, தெய்வீக இன்பத்தில் திளைக்க, நமக்குக் காட்டியருளுவதாகத் திருவாசகம் உரைக்கிறது.



ஸ்ரீ சௌரிராஜப்பெருமான் கோயில்
திருக்கண்ணபுரம்

"வண்ணம்தான் சேய தன்று வெளிதே
யன்று;
அனேகன் ஏகன் அணு அணுவிலிறந்
தாய் என்றங்கு
எண்ணந்தான் தடுமாறி இமையோர்
கூட்டம்
எய்துமாறறியாத எந்தாய் உன்றன்
வண்ணந்தானது காட்டி வடிவுகாட்டி
மலர்க்கழல் கள்வை காட்டி வழியற
றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட்
கொண்டாய்
எம்பெருமான் என சொல்லிச்
சிந்திக்கேனே"

இறைவன் கொண்ட திருக்கோலங்களை இருவகையாகக் காணலாம். (1) அடியவர்களுக்கு அருள் புரிவதற்காக அவர் பல நிலைகளில் தனது வடிவத்தைக் காட்டியமை (2) புராணங்களில் குறிப்பிடப்படும் அரிய திருக்கோலங்கள். அடியார்களை ஆட்கொள்ளச் சிவபெருமான் கொண்ட திருக்கோலங்களைத் திருத்தொண்டர் புராணம், திருவிளையாடற்புராணம் மற்றும் எண்ணற்றத் தலபுராணங்கள் வாயிலாக அறியலாம். பொதுமக்களாகவும், அடியாராகவும் அவர் கொண்ட கோலங்கள், தோன்றி மறையும் வரலாற்றுக் கோலங்களாக இருப்பதால் அவற்றை மக்கள் வழிபடுவதில்லை. முற்காலத்தில் நிகழ்ந்த நிலையான உண்மையை உணர்த்தும் திருக்கோலங்களையே மக்கள் வழிபடுகின்றனர்.

உருவம், அருவம், அருவுருவம் ஆகிய மூன்று நிலைகளுள் சிவபெருமான் அருவுருவாகத் தோன்றும் வடிவமே சிவலிங்கமாகும். இதனையே மூலமூர்த்தியாக ஆகமங்கள் கருதுகின்றன. புராண அடிப்படையில் தோன்றி, வழிபாட்டுக்கு உரியனவாகக் கருதப்படும் மூர்த்திகள் அனைத்தும் இலிங்கத்திடமிருந்து எழுந்தன. இவ்வாறு இலிங்கத்திடமிருந்து எழுந்த மூர்த்திகளை அஷ்டாங்க விக்கிரகங்கள் (64) என ஆகமங்கள் குறிக்கும். இதனையே, 'எட்டிருங்கலை சேர்...... உணர்ந்தவர்' ($8 \times 8 = 64$) என சம்பந்தர் கூறுகிறார். காரண ஆகமத்தில் இந்த அறுபத்து நான்கு மூர்த்தங்களையும் சுருக்கி, இருபத்தைந்து வடிவங்களாக எடுத்தியம்பப்பட்டுள்ளது. இவற்றுள் ஒன்றான பிட்சாடனரின் சிறப்பைக் காணலாம்.

புராண வரலாறு :

தேவ்தாருவனம் எனப்பெயர் பெற்ற தாருகாவனத்திலுள்ள முனிவர்கள் ஆணவம் மிக்கவர்களாக விளங்கினர். தாங்கள் செய்யும் கர்மமே அனைத்துப் பலன்களையும் அளிக்கவல்லது என்ற எண்ணம் கொண்ட அந்தத் தவசிகள், இறைவனை மறந்து தங்களது யாகங்களிலேயே நாட்டம் கொண்டிருந்தனர். அம்முனிவர்களின் பத்தினிகளும், கற்பு நெறியைப் பேணுவதை மட்டுமே மனதில் கொண்டு ஈசனை மறந்தனர். இவர்களுக்கு அறிவூட்ட விரும்பிய சிவபெருமான், எழில் மிக்க பிட்சாடனர் உருவம் கொண்டார். கண்டோர் மயங்கும் அழகிய உருவம் கொண்ட அப்பெருமானின் கைகளில் ஓடும், உடுக்கையும் விளங்கின. இன்னிசை ஒலித்தவாறு, பிக்ஷை ஏந்தி வரும் சிவபெருமானின் எழிலுருவில் முனிபத்தினிகள் மயங்கினர். தங்களின் வேலைகளை விட்டுவிட்டு பிட்சானரின் பின்னே அம்முனி பத்தினிகள் சென்றனர்.

இதே நேரத்தில் கொள்ளையழகு கொண்ட மோகினி உருக்கொண்ட திருமால் தாருகாவனத்து முனிவர்



ஸ்ரீ வீரட்டானேஸ்வரர் கோயிற் சிற்பங்கள்—திருவதிகை

களின் உள்ளத்தில் சபலத்தையுண்டாக்கினுர். மோகினியைத் தொடர்ந்து சென்ற முனிவர்கள், தங்களது பத்தினிகளை மயக்கிய பிட்சாடனரைக் கண்டு, வெகுண்டு, பல வாறு சபித்தனர். அவர்களது சாபம் எந்த விதப் பயனையும் அளிக்கவில்லை. சாபத்தினுல் பயன ஏற்படாததால் ஒரு வேள்வி புரிந்து அதினின்று தோன்றிய உடுக்கை, மான், யானை, புலி, சிங்கம் ஆகியவற்றை ஈசன்மீது ஏவினர். அவற்றையும் சிவபெருமான் அடககினுர். பின்னர் பிட்சாடனக் கோலம் கொண்ட சிவபெருமானும் மறைந்தருளினுர். மறு கணமே முனிவர்களைக் கொடுந்துன்பம் பிடித்தது. இந்த இன்னல்களிலிருந்து தங்களைக் காப்பாற்றுமாறு நான்முகனிடம் தவசிகள் வேண்டினர். நடந்தவற்றை பிரம்மதேவன் மூலம் அறிந்த முனிவர்கள் வருந்தினர். அருகிலேயிருந்த சிவபெருமானை அறிய இயலாத தங்களின் சிறுமையை எண்ணி நாணினர். நான்முகனின் அறிவுரையின் பேரில் சிவலிங்கம் ஒன்றைத் தாபித்து வழிபட்டனர். தவறையுணர்ந்த முனிவர்களுக்கு முன் சிவபெருமான் பிட்சாடனராகத் தோன்றி அருளினுர். இச்சம்பவம் சிவபுராணத்திலும், லிங்கபுராணத்திலும் இடம் பெற்றுள்ளது. இச்சம்பவத்தைச் சுந்தரமூர்த்தி நாயனுரும் போற்றுகிறுர்:

> "தங்கிய மாதவத்தின் சுழல் வேளவி
> யினின்று எழுந்த
> சிங்கமும் நீள்புலியுஞ செழுமால்
> கரியோடு அலறப்
> பொங்கிய போர்புரிந்து பிளந்து ஈருரி
> போர்த்தது".

**திருவுருவ அமைப்பு :**

பிட்சானர் ஆடை உடுத்தாமல், நிர்வாண கோலத்தில் தோன்றுவார் அவருக்கு நான்கு திருக்கரஙகள் உள்ளன. இடக்கையில் மண்டை ஓடு (கபாலம்) உணடு. பின் இடக்கையில் சூலம் இடம் பெற்றிருக்கும், பின் வலக்கையில் உடுக்கையும் முன் வலக்கையில் ஒரு செடியும இருகக வேண்டும். இடதுகால் தரையில் ஊனறியிருக்க, வலதுகால் நடப்பதற்கு அடையாளமாகச் சற்று வளைந்து தளர்ந்திருக்கும. தலையில் சடாமண்டலம் அல்லது சடாபாரம் அணி செய்யும். இடுப்பில் சுற்றிய வாறு அணி செய்யும் பாம்பு அப்பெருமானின் இடை மேல் சுற்றப்பட்ட ஆடைபோல் விளங்கும். நெற்றியில் பட்டமும், திருமாபில் முப்புரி நூலும் உள்ளன. சிறப்பியல்புகளான நீலகண்டத்தையும், திரிநேத்திரத்தையும் இப்பெருமான் பெற்றுள்ளார். திருவடிகளில் வேலைப்பாதுகையும், வலக்காலில் வீரககழலும் உணடு. பிரம்ம கபாலத்தை ஏந்தியதால் கபாலி எனப்படும் இப்பெருமானின் கபாலம் ஏந்திய கரம் நாபிவரை உயர்ந்திருக்கும். தமருகம் தாங்கிய வலககை, காதுவரை நீண்டு நிற்கும். இந்நிலையில் காதுக்கும், வலககையின் முன்னங்கைக்கும 16 அங்குலம் தொலைவு இடைவெளி இருகக வேண்டும். கபாலம் ஏந்திய இடககை கடகமுத்திரை நிலையில் காணப்படலாம்.

கூப்பிய கரங்களுடன வானேர்களும், இசைக் கருவிகள் ஏந்திய பூதங்களும் சுற்றிலும் இடம் பெற்றிருப்பர். இறைவனின் இடப்புறத்தில் பிச்சை உணவு இடவேண்டிய பெரிய கலம் ஒன்றை ஏநதிய பூதமும், வலப்புறத்தில் மானும் இருக்கும்.

**காலபைரவரும, கங்காள நாதரும் :**

ஆணவமிகுதியால சிவபெருமானின் முழு முதற்தன்மையை மறுத்ததுடன், நானகு வேதங்களையும், பிரணவத்தையும இகழ்ந்த பிரமனின் ஐந்தாவது தலையைக் கொய்ய பைரவரைச சிவபெருமான் படைத்தார். பைரவரும் நான்முகனின் ஐந்தாவது தலையைக் கொய்தார். இச்சம்பவத்தைப் புராணங்களிலும், திருக்கண்டியூர் தல புராணத்திலும் காணலாம். நான்முகனின் சாபத்தால் அத்தலை பிட்சை ஓடாக பைரவர் கையில் நிலைத்தது. பிரம்மகபாலத்துடன் சென்ற பைரவா, காசி எனும் புனித ஸ்தலத்தை அடைந்ததும் பைரவரைப் பற்றியிருந்த பிரமஹத்தி தோஷம் நீங்கியது. பிரமனின் ஐந்தாவது தலையைக் கிள்ளிய உருவமே பைரவர் என்றும், விஷ்வக்சேனரின் எலும்புக கூட்டை ஏந்திய வாறு பிட்சையெடுத்த வடிவமே கங்காளநாதர் என்றும் கூறப்படுகிறது கங்காளநாதர், பிட்சாடனர் ஆகிய இரு உருவங்களுமே கபாலத்துடன் பிட்சையெடுக்கும் கோலத்தில் அமைந்துள்ளன. உருவத்தால் பல ஒற்றுமைகளைப் பெற்றிருப்பினும பைரவர், கங்காளநாதர், பிட்சாடனர் ஆகிய மூவருக்கும் பல வேறுபாடுகள் உள்ளன. பைரவர் கோரைப் பற்களுடனும், தலையில் தீப்பிழம்புடன் தோன்றுவார். பொதுவாக நாய்வாகனத்துடன்காட்சியளிப்பார்.

(28-ம் பக்கம் பார்க்க)



பிட்சாடனர் (உலோகப் படிமம்)
வலம்புரநாதர் கோயில்—மேலப்பெரும் பள்ளம

# சித்திரத் திருப்பாவை



## 25. நெருப்பென்ன நின்ற நெடுமாலே!

''திருமகள் நாணும் பேரெழில் பெற்ற தேவகி ஒருத்திக்கு, வேதங்கள் எல்லாம் காண இயலா திருவுருவம் கொண்டு திருமகனாய்த் தோன்றினாய்! அந்த ஒரே இரவில்... திருமகளே மறு உருவம் பெற்றுத் திகழும் வண்ணமாக, கோகுலத்தில், யசோதை ஒருத்திக்கு இன்னுயிர் மகனாக ஒளிந்து, செங்கதிரோனாய்.

வளர்மதியென நீ வளரும் வளர்ச்சியைக் கேட்டு கேட்டு மனம் பொறுக்காதவனாகி, அனலும் கனலும் பறக்க, 'அவனைக் கொன்றே தீருவேன்'' என்று உபாயங்களைப் பல கையாண்ட அத்தீயோனான கம்ஸனுடைய பெரு வயிற்றிலே பெரு நெருப்பாய் நின்று அவனுக்குப் பேரச்சம் தந்து கொண்டிருந்த பேரருளாளனே! விண்ணும் மண்ணும் போற்றும் திரிவிக்கிரமனே!

உன்னையே மனம்மொழி மெய்யால் நினைந்து நினைந்து நெக்குருகி நின் ஸன்னதிக்கு வந்தோம்! உன்னிடம் உன்னையே யாசித்து வந்தோம்! உன் பவளவாய்த் திறந்து கமலச் செவ்விழிகளால் சிறிது நோக்கி, நீ அனுமதி கொடுத்தால் எங்களது வேண்டுகோளை கூறுவோம்! எங்கள் வேண்டுகோளைச் செவி சாய்த்துக் கேட்டருள்வாயானால் திருமகளாகிய மஹாலக்ஷ்மிக்கு உகந்த உனது சிறந்தப் பண்புச் செல்வங்களையும், அருளும் அருட் செல்வங்களையும், உன் வீர்யமிக்கப் பேராற்றல்களைப் பற்றியும் அவள் முன்னே பாடிடுவோம்!

அவ்வாறு பாடி, எங்களது வருத்தமும், உங்களது பிரிவுத் துயரினையும் கூறுவோம். அவற்றைக் கருணை கூர்ந்து கேட்டு, நாங்கள் மனம் மகிழும் வண்ணம், ஆனந்தம் பெறும் வண்ணம், திருவருள் புரிவாள்'' என்று திருமாலைக் கருவாக வைத்து, மஹாலக்ஷ்மியிடம் பெரும் செல்வங்களைப் பற்றி விளக்குகிறாள் ஸ்ரீகோதையாள்.

ஒருத்திமகனாய்ப் பிறந்து, ஓரிரவில்
ஒருத்தி மகனா யொளித்து வளரத்
தரிக்கிலா னாகித் தான்தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம்; பறை தருதியாகில்,
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய்!

பங்கயக் கண்ணன், பாவையரை நோக்கி, 'பனிபெய்யும் கடுங்குளிர் வீசும் குளிரையும் பொருட்படுத்தாது, வியாழம் மறைந்து வெள்ளி எழு முன்னே எழுந்து வருந்தி வந்தீர்களே! உங்களுக்கு வேண்டுவது என்ன?' என்று வினவ, அதற்கு விடையாக அமைந்துள்ளது இத்திரு பாசுரம் 'பச்சை மாமலைபோல் மேனி பெற்றவனே! உன்னுடைய உயர்ந்த குணங்களைப் போற்றிக் கொண்டும், பாடிக் கொண்டும் வரும் பொழுது, ஐயனே, பனியோ, பனிக்காற்றோ, குளிரோ, வருத்தமோ, கொஞ்சமும் தெரியவில்லை. உன்னிடம் யாசிக்கத்தான் வந்தோம்... உன்னை அடைவதில் தடையாக உள்ளவைகளை எல்லாம் விலக்கி எங்கள் துயரமெல்லாம் நீங்கிட, எங்களை அங்கீகரித்தருள வேணும்' என்று பிரார்த்திக்கின்றனர்.

'ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓர் இரவில் ஒருத்தி மகனாய்' வளரும் பெரும் பாக்கியம் பெற்ற 'ஒருவர்' இப்பிரபஞ்சத்திலேயே கண்ணபிரானைத் தவிர வேறு யாரேனும் உண்டோ? அத்தகு இறைவனிடம், நம்முடைய செயலாலோ, வேண்டுகோளாலோ விண்ணப்பஞ் செய்துதான் அவனிடமிருந்து பலனைப் பெற வேண்டும் என்பதில்லை. 'அவனு'டைய நினைவு ஒன்றே பலனைத்தரும்.

திருமாலின் திருமார்பில் வாஸம் செய்பவள் திருமகள். அவள் மனமும் மகிழ வேண்டாமா? அவள் அருளும் வேண்டாமா? எனவே நெடுமாலின் திருப்புகழை வீரதீர ஆற்றலைப் போற்றிப் புகழ்ந்திட அவளும் அருள்வாள். கண்ணபிரானுடைய அவதாரச் சிறப்பையும், திருவிளையாடல்களையும், அநாயாசமாக நிறைவேற்றிய துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலன நோக்கத்தையும், பகவானின் ஆற்றலையும், குணங்களையும் மனம் மொழி மெய்யால் பாடிட, அவனைப் பிரிந்து படும் துயரமெல்லாம், வருத்தமெல்லாம் தீர்ந்து ஆனந்தமும், மகிழ்வும் பெறுவோம் என்பனவற்றை இப்பாசுரத்தின் மூலம் ஸ்ரீஆண்டாள் எடுத்து இயம்புகிறாள்.

இறைவனே உன்அருள் கிடைக்கவில்லை என்றால்-வருத்தம்-துயரம்-ஆகிய நரகத்தில் உழல வேண்டியதுதான். இதனைக் கருத்திற் கொண்டே

'' நந்தா நரகத்து அழுந்தாவகை நாளும்
எந்தாய் தொண்டர் ஆனவர்க்கு இன்அருள் செய்வாய்!
சந்தோகா தலைவனே! தாமரைக் கண்ணா!
அந்தோ அடியேற்கு அருளாய் உன்அருளே!''

என்று திருமங்கை ஆழ்வார் ஓர் உருவம் கொடுத்துத் திருமாலை ஏற்றிப் போற்றுகிறார். 'சந்தோகம் என்னும் பழம்பெரும் வேதத்தின் பொருளாக விளங்குபவனே! நரகத்தில் உழலாமல் இருக்க அருள் செய்வாயாக' இதனையேதான் ஸ்ரீ ஆண்டாளும் உலக உயிர்கள் பொருட்டுவேண்டுகின்றாள்.

# 26. ஆலினிலையாய் அருளாய் !

"திருவை உலகிற்கெல்லாம் வாரி வழங்கும் திருமகளைத் திரு மார்பில் திகழ வைத்திருக்கும் திருமாலே!

உன் திருப்பாதக் கமலங்களையே அனுதினமும் தியானித்துவரும் ஆன்றோர்கள், மார்கழி வெண்மதி நிறைந்த இத்திருநாளில் அனுஷ்டித்து வந்த அறநெறிகளில் எங்களுக்கு என்னென்ன தேவை என்பதை நீ கேட்பாய்... அப்படிக் கேட்பாயானால் நாங்கள் பணிவுடனும், கனிவுடனும் உரைக்கின்றோம்.

வளி நிறைந்த ஆழிசூழ் இந்நிலவுலகில், சத்தியத்தில்... தர்மத்திலிருந்து பிறழ்ந்த பகைவர்கள்,தீமையே எண்ணித்-தீமையே செய்து-தீய எண்ணமே உருவான தீயோர்கள் எல்லாம், அஞ்சி அஞ்சி நடுங்கும்படி, எண் திக்கிலும் பேரொலி எழுப்புகின்ற, பால் போன்ற வெண்மையான நிறத்தை உடைய உனது ஸ்ரீபாஞ்சஜன்யம் என்ற திருச்சங்கினையே போன்று எண்ணற்ற வெண் சங்குகளை நீ எங்களுக்கு அருள வேண்டும்.

சிறப்பு மிக்க, காலத்தை வெல்லக்கூடிய, அனைவரது செவிகளிலும் ரீங்காரம் செய்யக்கூடிய இசைபாடும் தோல் கருவிகளை எங்களுக்கு நீ அருள வேண்டும். அது மட்டுமா? உனக்குப் பல்லாண்டு இசைக்கும் இசை விற்பன்னர்களைத் தந்தருள வேண்டும்.

மணி மாடக்கூடல் முதல் திருவீதிகள் வரை இறையுணர்வை மேம்படுத்த சித்ர வேலைப்பாடுகள் அமைந்த கொடிகளையும் தோரணங்களையும் வழங்குதல் வேண்டும். அஞ்ஞான இருளைப் போக்க மெய்ஞ்ஞான ஒளியை ஏற்றும் பேரெழில் பெற்ற திருவிளக்குகள் வேண்டும். ஆலிலையின் மேல் ஆனந்தமாய் திருவிளையாடல் புரியும் ஆராவமுதனே! இவ்வளவையும் எங்களுக்கு நீ அனுக்கிரகம் செய்து திருவருள் புரியவேண்டும்' என்று மார்கழி புனித நோன்பிற்கு மிகவும் அத்தியாவசியமானவற்றை எம்பெருமானிடம் விண்ணப்பித்து வேண்டுகின்றாள் ஸ்ரீகோதை.

மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்,
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள், போய்ப்பாடு டையனவே
சாலப் பெரும்பறையே, பல்லாண டிசைப்பாரே,
கோலவிளக்கே, கொடியே விதானமே,
ஆலினிலையாய்! அருளேலோ ரெம்பாவாய்.

'உன்னை அருத்தித்து வந்தோம்... பறை தருதியாகில்...' என்று கூறினர் கன்னியர். அது கேட்ட ஸ்ரீகண்ணபிரான், 'என்னை விரும்பும் நீங்கள் வேறு ஒன்றையும் விரும்புவீர்களோ?' என்று பவளவாய் மலர்ந்தருளினான். அதற்கு விடை இத்திருப்பாசுரம்.

'அதி விடியற்காலையிலே, துயிலெழுந்து, மங்கள ஸ்நானமாடி, அணி மணி அற்ற தூய ஆடை புனைந்து, உணர்ச்சிகளைத் தூண்டவல்ல நெய், பால் ஆகியவற்றை ஒதுக்கி, கண்களுக்கு அஞ்சனம் நீக்கி, கார் குழலில் சூடும் தேன் மலர்களை நீக்கி, தியானிக்கின்றோம் நின் திருநாமத்தினையே! ஆனாலும் தொன்று தொட்டு சான்றோர்கள் எப்படி அனுஷ்டித்து கைங்கர்யம் புரிந்தனரோ அவ்வாறு நாங்கள் செய்ய வேண்டாவோ? அவ்வாறு செய்ய அதற்கும் நீதான் அருள்புரிய வேணும்'என்று வினயத்துடன் விண்ணப்பிக்கின்றனர்.

பள்ளி எழுச்சிக்குச் சங்குகளையும், புறப்படும் முன் ஒலிப்பதற்கு பெறும் பறையும், இறைவன் நாமத்தை மக்கள் எல்லோரும் எண்ணவைப்பதற்கு, இசையோடு பாடும் பல்லாண்டு பாடுவோர்களையும், இருளை அகற்றுவதற்குக் கொடித் தோரணங்களும்,மார்கழி பனி தலைமீது பொழியாமலிருக்க விதானத்திரைசீலை வேண்டும் என்றும் விண்ணப்பிக்கின்றனர்.

இவைகள் இருந்தால்தான் வீதிவீதியாக வருகை தந்து இறைவனின் பெரும் புகழினைப் பரப்பி-தொடரும் துயரங்களைத் துடைத்தி— இறைவனின் பேரருளைப் பெருங்கருணையைப் பெற ஏதுவாகும். இத்தகு சூழ்நிலையிலேதான் உள்ளத்திலே ஒன்றி அவன் நிற்பான். 'அவன்' துணையில்லையேல் நெருப்பின்மேல் நின்ற எறும்பின் நிலைதான் அனைவருக்கும். எழுபிறவியிலும் துணை 'அவனே'. திருமங்கையாழ்வாரும் இக்கருத்தை

"உள்ளமோ ஒன்றில் நில்லாது ஓசையில் எரிநின்று உண்ணும்
கொள்ளிமேல் எறும்பு போலக் குழையுமால் என்தன் உள்ளம்
தெள்ளியீர் தேவர்க்கு எல்லாம் தேவராய் உலகம் கொண்ட
ஒள்ளியீர் உம்மை யல்லால் எழுமையும் துணையி லோமே."

என்று எடுத்துக் காட்டுகின்றார் 'இவ்வையகத்திற்கு.இவைகளை எம்பெருமானே! நாங்கள் வாய்விட்டுக் கூறினால் தான் நீ தரவேண்டும் என்றில்லை நீ கண் மலர்ந்து நோக்கினாலே போதும்' என்று ஸ்ரீஆண்டாள் புகழ்ந்து போற்றிச் சேவிக்கின்றாள்.

(23-ம் பக்கத் தொடர்ச்சி)

கங்காளநாதரும் நான்கு கரங்கள் பெற்றுள்ளார். முன் வலக்கையில் உடுக்கையை ஒலிக்க ஒரு சிறு குச்சியையும், முன் இடக்கையில் உடுக்கையையும் பெற்றுள்ளார். அவரது பின் வலக்கை அருகேயுள்ள மானிற்கு ஒரு பொருளை அளிப்பது போல உள்ளது. பின் இடக்கை கங்காள தண்டத்தைக் கொண்டிருக்கும். நின்ற நிலையில் தோன்றும் கங்காளநாதர் ஆடை அணிந்திருப்பார்.

இலக்கியத்தில் குறிப்பு:

பக்தி இலக்கியங்களில் ஈசன் பிச்சையெடுப்பவராகத் தோன்றிய கோலத்தைப் பற்றிய பல குறிப்புக்கள் உள்ளன. செருக்குமிக்க பிரம்மனின் ஐந்தாவது தலையைச் சிவபெருமான் தன் கையால் கிள்ளியெறிந்தார். இத்தலையோட்டினைக் கையில் கொண்டு, புலித் தோலாடை பல திக்குகளில் அசைய கழுத்தில் கொன்றைமாலை புரளச் சிவனுர் ஆடிய கபால நடனத்தைக் கலித்தொகைப் பாடலில் காணலாம். சுந்தரரின் பாடல் ஒன்றும் இக்கோலத்தைச் வருணிக்கிறது.

"ஏன்ற அந்தணன் தலையினை அறுத்து
நிறைக்க
மா உதிரத்தினை ஏற்றுத்
தோன்று தோள்மிசைக் களேபரந்
தன்னைச்
சுமந்த மாவிர தத்தகங் காளன்"

இறைவனின் பிற வடிவங்கள் மீது அதிகம் பாடாத சுந்தரர் பிட்சாடனக் கோலத்தை சிறப்பித்துள்ளார்:

"குரவம் நாறிய குழலினா வளை
கொள்வதே தொழிலாநீர்
இரவும் இம்மனை அறிதிரே இஙகே
நடந்து போகவும் வல்லிரே"

சிவபெருமானிடம் அன்பு மிகக் கொண்டு பரவி பாடிய அப்பரும்,

"பூதங்கொடு கொட்டி கொட்டிக்
குனித்துப்பாட
உள்ளங் கவர்ந்திட்டுப போவார்"



ஸ்ரீ மல்லிகார்ஜுன ஸ்வாமி கோயில் — ஸ்ரீசைலம்.

எம். ராஜ்யலட்சுமி - திருப்பதி.

என்று பிட்சாடனக் கோலத்தைப் புகழ்ந்தார். காழிப்பிள்ளைபிரான் ஞான சம்பந்தரும்,

"பற்றி ஒரு தலை கையினில் ஏந்திப்
பலிதேரும்
பெற்றி அதுவாகித் திரிதேவர் பெரு
மானுர்"

என்று இயம்பினுர்.

உணர்த்தும் உயர் தத்துவம்:

முழு முதற்கடவுள், பிறவாயாக்கைப் பெரியோன், ஆதிரை வல்லான் என்றெல்லாம் கருதப்படும் சிவபெருமான் பிச்சைக் கலனை ஏந்தி யாசிப்பது எந்த விதத்திலும் இழிவான செயலாகாது. இறைவன் அடியார்க்கு எளியவன் என்பதை உணர்த்துவது பிட்சாடனரின் கோலமாகும். எளிய தோற்றத்துடன் தோன்றும் இப்பெருமான், அடியவர்களின் குற்றங்களையும், குறைகளையும் ஏற்றுக் கொண்டு தனது நற்குணங்களைத் தந்தருள்கிறுர். மக்களிடமிருந்து பொருட்களையும், செல்வத்தையும் அவர் கேட்பதில்லை. உள்ளத்தன்புடனும், தூய்மையுடனும் தம்மை வழிபடுவோரையே அவர் நாடுகிறுர். மேலும் ஈகையின் பெருமையை உலகிற்கு உணர்த்துவதே பிட்சாடனத் திருக்கோலம்; இரப்பவர் இருந்தால் தானே கொடையளிப்பவர் இருக்க முடியும். இதில் பொருட்கொடை மட்டுமின்றி, அருள், அறிவு, ஞானம் ஆகியவற்றையும் உள்ளடக்கலாம். தனக்குக் கொடையளிக்கும் வாய்ப்பை அளிப்பதன் மூலம் அவ்வாறு ஈவோர்க்குத் தன் திருவடிகளை அடையும் மார்க்கத்தை ஈசன் அளிக்கிறுர் எனும் கருத்தைத் திருமூலரின் பாடல் விளம்புகிறது:

"பரந்துலகு ஏழும் படைத்த பிரானை
இரந்து உணி என்பார்கள்; எற்றுக்கு
இரக்கும்?
நிரந்தரமாக நினையும அடியார்
இரந்துண்டு தன்கழல் எட்டச்செய்
தானே"

நமக்கு அனைத்தையும் அளிக்கும் வல்லமை பெற்றிருந்த போதிலும் நம்மிடையே எதையோ பெறவிழைபவர் போல இரந்து அவ்வழியிலாவது நமக்கு அருள்புரிய வேண்டும் என ஈசன் விரும்புவதையே இக்கோலம் சுட்டிக்காட்டுகிறது. இதனையே ஆன்றேரும் குறிப்பிடுகின்றனர்.

(44-ம் பக்கம் பார்க்க)

ஸ்ரீபகவத் ராமானுஜருடைய தரிசனம் அதாவது அவர் கண்ட உண்மைகள், அறிவுடைய மானுடர்களின் உள்ளங்களில் ஆன்மப் பயிரினைச் சாகுபடி செய்யும் நீராக, உரமாக அமைவதற்காகத் தன்னுடைய கண்களையே தியாகம் செய்தவர் கூரத்தாழ்வான். அவரைத் தரிசனத்திற்குத் தரிசனம் கொடுத்தவர் என்று வைணவ உலகம் போற்றிக் கொண்டாடும். (தரிசனம் என்பது கண் பார்வையினையும் குறிப்பிடும் சொல்லாகும்). இராமானுஜர் அவரைத் தன்னுடைய பூணூலுக்குச் சமமாகப் புனிதமாகக் கருதினார். இராமானுஜருடைய பவித்திரம் கூரத்தாழ்வான். ஸ்ரீராமானுஜருக்குத் துணையாக வைதிக காரியங்களை நிர்வகிக்க, அவரால் நியமிக்கப்பட்டவர் கூரத்தாழ்வான்.

நான்காவது கட்டம். ஐந்தாவது கட்டம் அந்த நாளை நன்னாளாக முடிக்க இரவில் பகவானைத் துதித்துப் படுப்பதற்காக ஒதுக்கப்பட்டது. தாமரை இலை தண்ணீர் போல் இல்லறத்தில் வாழ்க்கை நடத்திய மகா ஞானியாகத் திகழ்ந்தார், கூரத்தாழ்வான். தனமதம், குலமதம், கல்வி மதம் என்ற மூவகையான கொடிய களைகள் ஆன்மப் பயிரினை வளரவிடாமல் தடுக்கும். பகவத் கல்யாண குணங்களின் சிந்தனை, தத்துவ விசாரணை ஆகிய களைக் கொட்டுகளைக் கொண்டு அக்கொடிய களைகளைக் களைத்தெறிந்தார் கூரத்தாழ்வான். அவருக்கிசைந்த வாழ்க்கைத் துணைவியாக இருந்தாள் ஆண்டாள். கூரத்தாழ்வானுடைய பெரும் புலமையும் அபார நினைவாற்றலும் 'இராமானு

மாள் கோயிலை. சாதாரண ஆடை உடுத்திக் கொண்டு நோக்கினார், பெருமாளுக்கு ஆலவட்டக் கைங்கர்யம் செய்து வரும் திருக்கச்சி நம்பியை. 'தூய உள்ளமும் உடலும் பெற்றுக் கொள்ள கழுவுவேன், இந்தப்பொருட் செல்வம் என்ற அழுக்கை; உய்வேன் ஸ்ரீ தேவித் தாயாரின் அருளைப் பெற்று; அதற்கு உபாயம்—ஆசார்யனின் ஸ்ரீ பாத தீர்த்தமே; தேவரீர் ஆசியால் அடியேனது நோக்கம் நிறைவேறும் என்று நம்புகிறேன்' என்று திருக்கச்சி நம்பியிடம் கூறினார் கூரத்தாழ்வான். ஆசீர்வாதம் பெற்ற தம்பதிகள் புறப்பட்டார்கள், திருவரங்கத்தை நோக்கி.

'இனி யானே பெருஞ்செல்வன்' என்று உள்ளம் பூரித்துப் போனார்.

# தரிசனத்திற்குத் தரிசனம் கொடுத்தவர்

அவர் பெருஞ்செல்வந்தராகயிருந்தும் கூட, உலகியலின்பங்களில் விரக்தியையும் உயிரின் நிலையற்ற தன்மையையும் சதா நினைத்துக் கொண்டிருப்பார். அவர் தன்னைப் பஞ்சகால பராயணராக அமைத்துக் கொண்டு வாழ்வு நடத்தியமையே அந்நினைவின் முதிர்ச்சிக்குக் காரணமாகும்.

அவர் தமது அன்றாட வாழ்க்கையை ஐந்து விதமாகப் (பஞ்ச கால கட்டங்களாக) பிரித்துக் கொண்டார். அவரது நீராட்டம் நியம நிஷ்டைகளுக்கும் பிரார்த்தனைக்கும் ஒதுக்கப்பட்டது, விடியற்காலம். தூய்மையான நிலையில் வாழும் மக்கள் இல்லங்களில் மட்டும் அவர் பிச்சை எடுத்து முடிக்க ஒதுக்கப்பட்டது அடுத்த கட்டம். பிச்சை எடுத்ததை அதிதிகளுக்கு இடுவதற்கு ஒதுக்கப்பட்டது மூன்றாவது கட்டம். அதிதி சத் கர்மா பண்ணி தாமும் உண்ட பின்பு பிற்பகலில் வேத பிரபந்தங்களை ஓதுவதற்கு ஒதுக்கப்பட்டது

ஜருக்குத் தமது சமயத்தை வளர்க்கப் பயன்பட்டது. அந்த வளர்ச்சியில் ஆண்டாளுக்கும் பெரும் பங்கு உண்டு என்று 'லட்சுமி காவியம்' கூறுகிறது.

காஞ்சிபுரத்திற்கு மேற்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது கூரம் என்ற அக்கிரஹாரம். அதில் வசித்த ஒரு பெரிய நிலப்பிரபு கூரத்தாழ்வான். இவர் தம் பெருஞ்செல்வத்தை அநாதைகள் பொருட்டும் அங்கஹீனர் பொருட்டும் செலவிட்டு வந்தார். அப்பொருளுக்குத் தம்மை முதலாளியாகப் பாவிக்கவில்லை. ஒரு தர்மகர்த்தாவாகவே நினைத்துக் கொண்டார்.

இராமானுஜர் துறவினை மேற்கொண்டு காஞ்சியிலிருந்து திருவரங்கம் சென்றதைக் கேள்விப்பட்டார். மனைவியுடன் உடனே புறப்பட்டு அடைந்தார் ஸ்ரீ வரதராஜப் பெரு

---

திரு. ஏ. ஸ்ரீராமுலு தேசிகன்
புதுச்செந்நெல்குளம்.

---

ஆண்டாளையும் கூரத்தாழ்வானையும் கண்ட இராமானுஜர்.

மகரிஷி போதாயனர் இலட்சம் கிரந்தங்களில் பிரம்ம சூத்திர பாஷ்யம் செய்திருந்தார். அது காஷ்மீரில் இருந்ததைக் கேள்விப்பட்ட இராமானுஜர், தம் ஆசார்யன் ஆளவந்தார் விருப்பம் நிறைவேற்ற ஸ்ரீபாஷ்யம் இயற்றுவதற்கு உதவியாயிருக்குமென்று அதனைப் பெறக் கூரத்தாழ்வானுடன் சென்றார். அதனைப் பெற்றுக் கொண்டார். அந்நூல் மிகக் குறுகிய கால அளவே இராமானுஜரிடமிருந்தது. அக்காலக் கட்டத்தில் உடல் அசதியால் அதனைப் படிக்க அவரால் இயலவில்லை. ஆனால் ஒரு தரம் படித்து முடித்துப் பொருளையும் உணர்ந்து கொண்டார் கூரத்தாழ்வான். 'நான் இழந்த மணியை உன்னால் பெற்றதனால் என்றென்றும் உனக்குக் கடமைப் பட்டவனாக என்னை நீ செய்துவிட்டாய்', என்று இராமானுஜர் போற்றினார் கூரத்தாழ்வானை.

இராமானுஜரின் தனிப் பெரும் நூல் ஸ்ரீ பாஷ்யம். அதனுல் அவரை ஸ்ரீபாஷ்காரர் என்பர். அந்நூல் இயற்ற அரிய தத்துவங்களைக் கூறிய வரும், எழுது கோலைப் பிடித்தவரும் கூரத்தாழ்வான் ஆவார்.

'அறிவுடைய ஆன்மா ஞானத்தையோ, ஞான கர்மங்களையோ உபாயமெனக் கொண்டு முக்தி அடையும் என்பது வேத வேதாந்தங்களின் கருத்தல்ல. ஞானத்தோடு யக்ஞம், தானம், தவம், கருமம் முதலியன யாவுமே கட்டாயம் கொள்ளத் தக்கன என்று கூறும் கருத்துக்கள், வேத வேதாந்தங்களின் கருத்தல்ல. தியானம், உபாசனை, பக்தி, பிரபக்தி இவற்றின் மூலமே முக்தி அடைய முடியும் என்பதுதான், வேத வேதாந்தங்களின் கருத்து' எனக் கூறித் தமது சிந்தாந்தத்தை ஸ்ரீபாஷ்யம் எழுதுவதன் மூலம் தலைக்கட்டினர் இராமானுஜர். அவரது கருத்துக்களின் கருவூலம் கூரத்தாழ்வரனே யாவர்.

அந்நாளில் சோழ நாட்டரசன் தனது தலைநகரிலுள்ள அனைத்து மக்களையும் சைவ மதத்தைத் தழுவுமாறு வற்புறுத்தி வந்தான். இராமானுஜர் தம் கொள்கைக்கு ஸ்ரீபாஷ்யம் என்ற கோட்டையையும் கட்டி, திக் விஜயம் செய்து தம் சிந்தாந்தத்தைப் பரப்பியும் வருவதைத் தெரிந்திருந்தான். நாலூரான் என்ற அமைச்சன் ஆலோசனையின் பேரில் இராமானுஜரைத் தம் கொள்கைக்கு வற்புறுத்தி இணங்க வைக்க எண்ணினன். எனவே ஒற்றர் மூலம் அழைத்து வரச் சொன்னன்.

செய்தியறிந்த கூரத்தாழ்வான் இராமானுஜருடைய காவி ஆடையைக் கட்டிக் கொண்டு ஒற்றர்களுடன் சென்றுர். ஆழ்வானைத் தனியே விடலாகாதென்றெண்ணிப் பெரிய நம்பியும் உடன் புறப்பட்டார்.

மடத்துக்கு வந்த இராமானுஜர் சீடர் மூலம் அறிந்தார். 'இராமானுஜர்' வாழ வேண்டும்—வைஷ்ணவ வளர்ச்சியை முன்னிட்டு. தாம் உயிர் தியாகம் செய்ய வேண்டும்—அதே வைஷ்ணவ வளர்ச்சிக்காக. இதுதான் சீடர் திலகமான கூரத்தாழ்வான் உள்ளக் குறிப்பு', என்பது பளிச் சென்று மின்னிவிட்டது இராமானுஜரின் உள்ளத்திலே.

கூரத்தாழ்வானின் வெள்ளை உடையை அணிந்து, ஸ்ரீ ரெங்கநாதனின் கோயிலுக்குப் போய் அவனைச் சரணமாக அடைந்து உள்ளம் தெளிவடைந்த இராமானுஜர், வேகமாக ஸ்ரீ ரெங்கத்தைவிட்டுச் சில சீடர் குழாங்களுடன் தப்பித்துப் போய் விட்டார்.

அரச சபைக்கு வந்த கூரத்தாழ்வானை இராமானுஜர் என்றே முதலில் எண்ணினன் சோழ அரசன். நாலூரான் மூலம் உண்மை அறிந்தான். ஆழ்வானையும் பெரிய நம்பியையும், 'சிவனுக்கு மேலே உயர்ந்த பொருள் இல்லை', என்ற வாக்கியத்துடன் கூடிய விளக்கங்கள் எழுதி கையொப்பமிடச் சொன்னன். அதிகாரத்தைப் பிரயோகித்து வற்புறுத்தினன்.

சமய வாதம் ஏற்படும் பொழுதெல்லாம் ஒவ்வொரு கட்சியினரும் தமது கட்சியின் முடிவையே நிலை நாட்ட முயலுகின்றனர். சுகமான சிந்தனைகளுக்கும் அமைதிக்கும் ஒரே உபாயம் காண்பதே மதத்தின் குறிக்கோள். விரோதம், தீய எண்ணம், கொண்டவர் மதவாதியல்ல. இதனைப் பல அறிஞரும் ஒப்புக் கொள்வர். அதிகாரம் மதிமயக்கிவிட்டது சோழ அரசனை.

'பிரம்மத்தை அனுபவிப்பதனுல் வரும் ஆனந்தத்தை அறிந்தவன் ஒரு நாளும் அஞ்சான்,' ('ஆனந்தம் பிரம்மணோ வித்வான் நபிபேதி குதஸ்சந') என்ற சாத்திர வாக்கியத்திற்கு ஏற்ப, பஞ்ச கால பராயணராக வாழ்க்கை நடத்திய கூரத்தாழ்வான் சோழ அரசனின் அச்சுறுத்தலுக்கோ, காவலாளிகளின் மிரட்டல்களுக்கோ அஞ்சிக் கலங்கவில்லை. 'ஸ்ரீமகா விஷ்ணுவே பிரம்மா தொடங்கி, தூண் ஈறுக வுள்ள உலகத்திலுள்ளவர்கள் யாவருக்கும் உயர்ந்த பொருளானவர்; யாவர்க்கும் உபாசனமூர்த்தி யாவார்', என்று நிலைத்த மதியில் நின்று தம் கொள்கைக்கு விளக்கங்கள் கொடுத்தார் கூரத்தாழ்வான்.

ஆத்திரமடைந்த சோழ அரசன் சேவகர்களிடம் பெரிய நம்பி, கூரத்தாழ்வான் ஆகிய இருவரையும் துன்புறுத்திக் கண்களைப் பிடுங்கி ஏறியும் படி உத்தரவிட்டான். உடனே வேட்டை நாய்கள் யானைக் கூட்டத்தின் தலைவன்மீது பாய்ந்து துன்பம் விளைவிப்பது போல், சேவகர்கள் பெரிய நம்பியின் மீது பாய்ந்து துன்பம் விளைவித்துக் கண்களைப் பிடுங்கி எறிந்தார்கள். ஆனுல் கூரத்தாழ்வான் அரசன் உத்தரவினைக் கேட்ட மாத்திரத்தில், 'மதி இழந்த மன்னனைக் கண்ட இக்கண்களை நானே பிடுங்கிக் கொள்கிறேன்'', என்று கூறித் தம் கண்களைத் தானே அவித்துக் கொண்டார். சிறிதும் சீற்றமில்லாமல் துன்புறுத்தியவர்களின் நலனையே நோக்கிப் பகவானிடம் பிரார்த்தித்தார். பிறவிப் பெருங்கடலை நீந்த உதவிய மகத்தான கப்பல் தலைவரான ஸ்ரீராமானுஜரை யுக்தியினுல் காப்பாற்றியதை நினைத்து நினைத்து உள்ளம் பூரித்தார் கூரத்தாழ்வான். இராமானுஜர் தரிசனம் வளர்வதற்குத் தம்முடைய தரிசனத்தை இழந்த மகானுகத் திகழ்ந்தார் கூரத்தாழ்வான்.

# ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்

திருவேங்கடவனைத துயிலெழுப்புதல் நூற் பொருள். இருபத்தொனபது சுலோகங்கள் இந் நூலில் உள்ளன.

முதல் சுலோகத்தில் இராமனுகவும் இரண்டா வது சுலோகத்தில் கோவிந்தனுகவும் விளித்துத் திரு வேங்கடமுடையான் துயிலெழுப்பபபடுகிருர். அதற்கடுதத இரண்டு (3-4) சுலோகங்களில் ஸ்ரீ மகா லக்ஷ்மி துயிலெழுப்பப்படுகிருள். (முதலில் திரு மகளை யெழுப்பிவிட்டுப் பிறகு திருமாலைத் துயி லெழுப்புவது முறை. அப்படித்தான் நூலும் முத லில் அமைந்திருக்கக் கூடும். பிற்காலத்தவர் முத லிரண்டு சுலோகங்களைக் கலந்திருக்கலாம் என்று தோன்றுகின்றது.) ஐந்தாவது சுலோகத்திலிருந்து திருவேங்கடமுடையான துயிலெழுப்பப்படுகிருர். அத்ரி முதலிய மஹரிஷிகள், பரமசிவன் முதலிய தேவர்கள் வந்து ஸேவைக்குக் காத்திருப்பதாக ஐந் தாவது ஆருவது சுலோகங்கள் கூறுகின்றன. ஏழா வது சுலோகத்தில் காற்று, எட்டில் கிளிகள், ஒன்ப தில நாரதர், பத்தில் வண்டினங்கள், பதினென்றில் தயிர்க்குடம், பன்னிரண்டில் வண்டினவோசை முறையே வர்ணிக்கப்படுகினறன. பதினைந்தில் ஏழு (ஆறு) மலைகள, பதினுறில் திக்பாலகர்கள், பதினே ழில் ஆதிசேஷன் முதலியோர், பதினெட்டில் நவக்ர ஹங்கள், இருபததுநான்கில் தசாவதாரங்கள், இரு பத்தைநதில் திருமஞ்சன தீர்த்தம கொணடுவரும் அடியாாகள, இருபத்தாறில் மங்களாசாஸனம செய யும் ஸ்ரீவைஷ்ணவாகள், இருபத்தேழில் மங்களப் பொருளொடு வந்திருக்கும் ஸநக ஸநந்தநாதி முனி வாகள் கூறப் பெறுகின்றனர்.

ஸதோத்ரம :

திருவேங்கடவனைப் புகழுதல் நூறபொருள். பதினெரு சுலோகங்கள இந்நூலில உளளன.

முதல் சுலோகத்தில் திருவேங்கடமுடையானுக் குத் திருமகள் பால் உள்ள கனிந்த காதலும், இரண டில் அயன் முதலிய தேவரும் எம்பெருமானைச் சரணமடைகின்றனர் என்பதுவும், மூனறில் நாம் செய்த தவறுகளை எம்பெருமான் பொறுத்து மன னித்துவிடும் வகையும், நானகிலும் ஐந்திலும் திரு வேங்கடமுடையானைக்காட்டிலும் நாம் அடையத் தக்க வேறு பெரியதெய்வம் இல்லையென்பதுவும், ஐந்தில் ஸ்ரீ கருஷ்ணனே திருவேங்கடமுடையான் என்பதுவும், ஆறு ஏழு எட்டு இம்மூன்று சுலோகங் களில் ஸ்ரீராமனே திருவேங்கடமுடையான் என்பது வும், ஒனபதில் ஸ்ரீநிவாஸனைத் தவிர வேறு தலைவன் நமககில்லை யென்பதுவும், பத்தில ஒருதரம் வணங் கினுலே நாம கோரியபயனைப் பெறலாமென்பதுவும், பதினெனறில் நாம் செய்யும் தவறுகளை மன்னித்து விடுகிருன் என்பதுவும் கூறப்பெறுகின்றன.

பரபததி :

சரணமடைதல் நூறபொருள். பதினுறு சுலோகஙகள் இந் நூலில உள்ளன.

முதல சுலோகத்தில் திருமகள் வணக்கம். இரண்டுமுதல் பதினைந்து வரையில் சரணுகதி. பதி னுறில் நாம் திருவேங்கடமுடையானுக்குத் தொணடு செய்தலெனும் சரணுகதியின் பயன் என்ற இவ்விஷ யங்கள் முறையே கூறப்படுகின்றன.

மங்களாசாஸநம் :

எமபெருமானுக்கு மங்களங்களை வேண்டுதல் நூறபொருள். பதினுன்கு சுலோகஙகள் இந்நூலில் உள்ளன.

ஒன்றுமுதல் பதினனகுவரையிலுள்ள எல்லா சுலோகஙகளிலும் 'எம்பெருமானுக்கு மங்களம் உண் டாகட்டு'மென்று வேணடப்படுகிறது.

ॐ ॐ ॐ

कौसल्या सुप्रजा राम पूर्वा सन्ध्या प्रवर्तते ।
उत्तिष्ठ नरशार्दूल कर्तव्यं दैवमाह्निकम् ॥

கௌஸல்யா ஸுப்ரஜா ராம
பூாவா ஸந்த்யா பரவாததே |
உததிஷட நரசார்தூல
காத்தவ்யம தைவமாஹ்நிகம் ||

பதவுரை — கௌஸல்யா ஸுப்ரஜா=கோசலை யின நற்புதலவனே! ராம=இராமனே! நர சார் தூல=ஆண்களில் சிறந்தவனே! பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே = காலைபபொழுது புலருகிறது; தைவம்=தேவர்களை (தேவர் முதலியவர்களை)க்

குறித்துச் செய்ய வேண்டிய; ஆஹ்நிகம்=நித்திய கருமங்கள்; கர்த்தவ்யம்=(நம்மால்) செய்யப்பட வேண்டும், (நாம் செய்ய வேண்டும்.) உத்திஷ்ட= பள்ளி எழுந்தருளுக.

கருத்துரை — (இச்சுலோகம் வான்மீகியில் உள்ளது. விச்வாமித்ரர் இராமனை எழுப்பும் சுலோகம்). கோசலை மனங்குளிர அவள் மணிவயிறு வாய்த்தவனே! காலை வேளையாய் விட்டது. பள்ளியெழுந்தருள்வாயாக. நாம் தினந்தோறும் செய்ய வேண்டிய ஸந்த்யாவந்தனம் முதலிய கருமங்களைச் செய்ய வேண்டும். ஆதலின் நீ (உன் தம்பியுடன்) உறங்காதெழுந்தருள்வாயாக.

குறிப்பு :— திருவேங்கடவனும் இராமனும் ஒருவனே.

उत्तिष्ठोत्तिष्ठ गोविन्द उत्तिष्ठ गरुडध्वज ।
उत्तिष्ठ कमलाकान्त त्रैलोक्यं मङ्गलं कुरु ॥

உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த உத்திஷ்ட கருடத்வஜ|
உத்திஷ்ட கமலாகாந்த த்ரைலோக்யம் மங்களம்
குரு ||

பதவுரை :— கோவிந்த=பசு (ஆன்மா)க்களைக் காப்பவனே! உத்திஷ்ட=பள்ளிஎழுந்தருள்; உத்திஷ்ட=பள்ளி எழுந்தருள்; கருடத்வஜ=கருடனைக் கொடியில் உடையவனே! உத்திஷ்ட=பள்ளி எழுந்தருள்; கமலா காந்த=திருமகள் அன்பனே! உத்திஷ்ட=பள்ளி எழுந்தருள்; த்ரைலோக்யம்=மூன்றுலகங்களையும்; மங்களம்=சுபமுள்ளவையாக; குரு= (நீ) செய்.

கருத்துரை :— நீ கண் விழிக்காவிடில் மூவுலகங்களும் செம்மை பெருதழியும். ஆதலின் அவைகளை வாழ்விப்பதற்காக நீ திருக்கண் மலரவேண்டும்.

मातस्समस्तजगतां मधुकैटभारेः
वक्षोविहारिणि मनोहरदिव्यमूर्ते ।
श्रीस्वामिनि श्रितजनप्रियदानशीले
श्रीवेङ्कटेशदयिते तव सुप्रभातम् ॥

மாதஸ்ஸமஸ்தஜகதாம் மதுகைடபாரேர்
வக்ஷோவிஹாரிணி மநோஹரதிவ்ய மூர்த்தே ।
ஸ்ரீஸ்வாமிநி ச்ரிதஜந ப்ரியதாந சீலே
ஸ்ரீ வேங்கடேச தயிதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— ஸமஸ்தஜகதாம்=எல்லா உலகங்களுக்கும்; மாத:=தாயே; மதுகைடபாரே:=மதுகைடபர்களை அழித்தருளிய ஸ்ரீ விஷ்ணுவினுடைய; வக்ஷா விஹாரிணி=திருமார்பில் விளையாடுபவளே! மநோ ஹர=உள்ளத்தைக் கவரக்கூடிய; திவ்ய= உயர்ந்த (அழகிய); மூர்த்தே=திருவாகார முடையவளே; ச்ரிதஜந=அண்டியவர்களுடைய; ப்ரிய= விருப்பங்களை; தாந=அளிப்பதை; சீலே=இயற்கையாய் உடையவளே! வேங்கடேச=திருவேங்கடமுடையானுடைய; தயிதே = அன்பிற்குரியவளே! ஸ்ரீஸ்வாமிநி=பிராட்டியே! தவ ஸுப்ரபாதம்= உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— அழகின் மிகுதியால் திருவேங்கடமுடையான் திருவுள்ளத்தைக் கவர்ந்து அவனுடைய திருமார்பில் எப்பொழுதும் இருந்து விளையாடக் கூடிய செல்வாக்கு உனகது அவனிடத்தில் உண்டு. அத்தகைய அன்பு அவனுக்கும் உன்னிடத்தில் உண்டு. எல்லா உலகங்களுக்கும் தாயாகிய நீ இவ்வுலகத்தவர்கள் உன்னை அண்டி வேண்டும் பயன்கள் அனைத்தையும் கொடுக்கும் இயல்புள்ளவளாயிருக்கிறுய். நீ திருக்கண் மலர வேண்டும்.

तव सुप्रभातमरविन्दलोचने भवतु प्रसन्नमुखचन्द्रमण्डले ।
विधिशङ्करेन्द्रवनिताभिरर्चिते वृषशैलनाथदयिते दयानिधे ॥

தவ ஸுப்ரபாத மரவிந்தலோசநே
பவது ப்ரஸந்ந முகசந்த்ர மண்டலே |
விதிசங்கரேந்த்ர வநிதாபிரர்ச்சிதே
வ்ருஷசைலநாததயிதே தயாநிதே ||

பதவுரை :— அரவிந்த லோசநே = தாமரை மலர் போன்ற கண்களை உடையவளே; ப்ரஸந்ந முக சந்த்ர மண்டலே=பூர்ண சந்திரன் போன்று நிர்மலமான முகமுடையவளே; விதி சங்கர இந்த்ரவநிதாபி:=அயன் அரன் இந்திரன் (இவர்களுடைய) மனைவிகளால்; அர்ச்சிதே = பூஜிக்கப்பட்டவளே! தயா நிதே=அருளுக்கு உறைவிடமானவளே! வ்ருஷ சைல நாத தயிதே=திருவேங்கடமுடையானுடைய அன்பிற்கு உரியவளே! தவ ஸுப்ரபாதம்=உனக்கு நல்விடிவு; பவது=ஆகட்டும்.

கருத்துரை :— குளிர்ந்த கண்கள், தெளிந்த முகம், பற்றினவர்களிடத்தில் நிறைந்த அருள் முதலிய உயர்ந்த குணங்களை உடைய உன்னிடத்தில் திருவேங்கடமுடையான் அன்புடன் இருக்கிறுன். இத்தகைய மேன்மை வாய்ந்த உன் அருளைப் பெற்று வாழ்வதற்காக ஸரஸ்வதியும் பார்வதியும் இந்த்ராணியும் உன்னை வணங்கித் தொழுகின்றனர்.

குறிப்பு :— திருவேங்கடமென்பது ஏழு மலைகள் கொண்ட ஓர் மலைத்தொடர். அதனுல் அப்பிரானுக்கு ஏழுமலையான் என்றும் பெயர் உண்டு. அவைகளில் 'வ்ருஷசைலம்' என்பது ஒன்று. மலைகளின் பெயர்களைப் பதினைந்தாவது ச்லோகத்தில் காண்க.

(தொடரும்)

# தெற்குப் பார்த்த ராஜாக்கள்

கோயில்களில் இருக்கிற சுவாமிகள் எல்லாம் அனேகமாகக் கிழக்கைப் பார்த்துக் கொண்டு இருப்பார்கள் பெருமாள் கோயிலாக இருந்தாலும் சரி, சிவன் கோயிலாக இருந்தாலும் சரி, கிழக்கே பார்த்துக் கொண்டிருக்கும்படியான சந்நிதிகள்தாம் அநேகமாக இருக்கும். சில இடங்களில் மாத்திரம் மேற்கே பார்த்த சந்நிதி இருக்கும். மேற்கே பார்த்துக் கொண்டிருக்கும்படியான சந்நிதிகள் இருக்கிற கோயில்களில் கிழக்குக் கோபுரத்தையாவது பலமாகக் கட்டியிருப்பார்கள். சென்னையில் கபாலி கோயிலில் அப்படித்தான் இருக்கிறது. பெருமாள் கோயில் என்று காஞ்சிபுரத்துக்குப் பெயர். பெருமாளுக்குத் தேவராஜப் பெருமாள், வரதராஜர் என்று பெயர். அவருக்கும் அப்படித்தான். அங்கே பெருமாள் மேற்கே பார்த்துக் கொண்டிருக்கிறார். கிழக்கு கோபுரம் மிகவும் உயரமாக இருக்கிறது.

பொதுவாக எல்லாக் கோயில்களிலும் சுவாமி சந்நிதி கிழக்கையோ மேற்கையோதான் பார்த்துக்கொண்டிருக்கும். தெற்கே பார்க்கும் சுவாமிகள் இருவர்தாம். அவர்கள் இரண்டு பேரும் ராஜாக்கள்: இரண்டு ராஜாக்களும் சிதம்பரம் கோயிலிலும் சரி, ஸ்ரீரங்கம் கோயிலிலும் சரி, தெற்கே பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள். 'நடராஜா' ஒருவர் 'ரங்கராஜா' மற்றொருவர். இவர்கள் இரண்டு பேரும் கலா க்ஷேத்திரத்தைச் சேர்ந்தவர்கள். ரங்கம் என்றால் நாடகமேடை என்று அர்த்தம்.

பூர்வரங்கப்ரஸங்காய நாடகீயஸ்ய வஸ்துந: | என்று சொல்கிற மகானுடைய காவ்யத்தில் ரங்கம் என்றால் சபையில் வந்து ஆடுகிறவர்களுக்குச் சற்று உயரமாகப் போடும்படியான மேடை என்று அர்த்தம். அதிலே ராஜாவாக இருப்பவர் ஒருவர் ரங்கராஜா; இன்னொருவர் நடராஜா' கூத்தாடுகிறவனுக்கு ராஜா.

திருப்பதியில் இருக்கிற பெருமாளுக்கு ராஜா என்ற 'டைட்டில்' கிடையாது. ஈசுவரன் பெயரைச் சேர்த்து 'வேங்கடேசுரர்' என்றுதான் சொல்கிறார்கள். மலையாளத்தில் வேங்கடேசுவரன் என்ற பெயர் அதிகம். தெலுங்கு தேசத்திலும் அப்படித்தான். ராஜா சப்தம் ராஜாக்கள் இரண்டு பேர்களுக்குத்தான். சிவன் கோயிலுக்குப் போனால் மகாலிங்கம் கிழக்கே பார்த்துக் கொண்டிருப்பார் அவருக்கு ஈசான்ய திக்கில் நடராஜா தெற்கே பார்த்துக் கொண்டிருப்பார். ஒரு காலை வேறு தூக்கிக் கொண்டு நிற்பார். அவரை எப்பொழுதும் நாம இருதயத்தில் தியானம் பண்ணிப்பண்ணி, கொஞ்சம் கொஞ்சமாக அவரை நினைத்து, அந்த ஆனந்த தாண்டவ மூர்த்தியின் ஸ்வரூபம் மனத்தில் ஸ்புரிக்கும்படியாக ஆகிவிட்டால் அதைத்தான் சித்தியாகி விட்டது என்று சொல்வது. மிகவும் பிரியமான குழந்தைகளையோ சிநேகிதர்களையோ நினைத்தவுடன் மனசில் அவர்களுடைய உருவம் நமக்கெல்லாம் வருகிறது இவர்களை எல்லாம் நினைப்பது துக்கத்துக்குத்தான் காரணம் ஒன்று, நாம் அவர்களை விட்டு என்றைக்கோ போகப் போகிறோம்; அல்லது அவர்கள் நம்மை விட்டுப் போகப் போகிறார்கள்.

'வியோகே கோ பேத:?'

பிரிவதில் என்ன பேதம் இருக்கிறது! இரண்டு பேரும் ஒருவருக்கு ஒருவர் எவ்வளவு அபிமானம் வைத்து ஆனந்தமாக இருக்கிறார்களோ அவ்வளவுக்கு அவ்வளவு கடைசியில் யாராவது ஒருவர் அழுதுதான் ஆக வேண்டும். எவ்வளவுதான் ஒருவருக்கு ஒருவர் விலகாமல் இருந்தாலும் கடைசியில் ஒரு கத்திரிப்பு ஏற்பட்டே தீருகிறது. இப்படிப்பட்ட கத்திரிப்பு, ஸ்வாமியிடம் வரப்போவது இல்லை. ஆகையால் துக்கத்துக்கு இடமே இல்லை. ஆகையால் ஆனந்த மூர்த்தியைத் தரிசனம் பண்ணிப் பண்ணி, நினைத்தால அவருடைய ஆனந்த ஸ்வரூபம் நமமுடைய மனக்கண்முன் வந்துவிட வேண்டும். இதற்குத்தான் மந்திர சித்தியாவது என்று பெயர். தெற்கே பார்த்துக் கொண்டு இருப்பவர்களுடைய உருவம் நமக்கு வந்தால் போதும். தெற்கேயிருந்து வரும்படியான யமனுடைய வாதனை-உபத்திரவம் நமக்கு வராது. 'அவன் தொந்தரவு பண்ண வருகிறானா? வந்தால் என்ன செய்கிறேன் பார்' என்பது போலத்தான் நடராஜர் தம் ஒரு காலைத் தூக்கிக் கொண்டு அந்தப் பக்கம் பார்த்துக் கொண்டே இருக்கிறார். தூக்கிக் கொண்டு இருக்கும்படியான அவரது பாதத்துக்குக் குஞ்சிதபாதம் என்று பெயர். நம்மில் அநேகம் பேர் குஞ்சிதபாதம் என்று பெயர்கூட வைத்துக்கொள்கிறார்கள்.

திரு. என். சுப்பிரமணியன்,
தஞ்சாவூர்.

இந்த இரண்டு ராஜாக்களும் தெற்கே பார்த்துக் கொண்டு இருக்கும்படியான காரியமோ ஒன்றுக்கொன்று நேர் விரோதம்.

ஒருவர் ஆனந்தமாகத் தூங்கிக் கொண்டு இருக்கிறார். இன்னொருவர் ஆனந்தமாகக் கூத்தாடிக் கொண்டு இருக்கிறார். இவரது ஆனந்தம்

கூத்து. அவரது ஆனந்தம் தூக்கம். கூத்து, தூக்கம் இரண்டிலும் ஆனந்தம்தான் ஸ்புரிக்கிறது. 'ஆனந்தம் அதிகமானுல் கூத்தாடுவார்களா?' என்பது நமக்குச் சந்தேகமாக இருக்கலாம். சிலசமயங்களில் உற்சாகம் வந்துவிட்டதானுல் பாட ஆரம்பித்து விடுகிறேம். பாட்டு, கூத்து இரண்டும் ஆனந்தத்தைச் சேர்ந்தவையே. ஆத்மஞானம் வந்தவர்கள் பிரம்மாநுபவம் ஏறபடும்போது ஆனந்தமாகக் கானம் பண்ணிக்கொண்டு இருப்பார்கள்.

ஆனந்தத்திலே இரண்டு வகை இருக்கிறது. பொங்குகிற நிலை ஒன்று. அடங்கி அநுபவிக்கின்ற நிலை ஒன்று. பொங்குகிற ஆனநத தாண்டவ மூர்த்தி நடராஜா. அவர் சடையைப் பார்த்தாலே இது தெரியும்; இப்படி இரண்டு பக்கமும் 'கிர்ர்' என்று அவர் சுற்றுகிற வேகத்திலுலே சடை தூக்கிக் கொண்டு நிற்கிறது. 'விரித்த செஞ்சடையான்' ஆகிவிடுகிறுன். அப்போது அவன் கையில் இருக்கிற உடுக்கிலிருந்து,-அ இ உ ண், ருலுக் என்பதான 14 சூத்திரங்கள் வந்து கொண்டு இருக்கின்றன. நந்திகேசுவர காரிகை என்று பரம கதியை அடைவதற்கு மார்க்கமாக 14 சுலோகங்களை அதிலிருநது செய்திருக்கிறுர்கள். சாண்டில்யர் அதற்குப் பாஷ்யம் எழுதியிருக்கிறுர். ஆனந்த தாண்டவ மூர்த்தியின் கையிலிருந்து வரும்படியான அந்த 14 சூத்திரஙகளும்தாம அதிலிருநதுவிரிந்த மஹா பாஷ்ய நூலில் அடங்கியிருக்கினறன. கூததாடும்போது பொங்கி வந்த சப்தங்கள் நூலில் அடஙகியிருக்கின்றன. ஆனந்தக் கூத்தின சப்தங்கள் அடங்கியிருக்கும்படியான இந்த நூலைக கையில் வைததுக் கொணடு, சாந்தம் அமைந்திருககும்படியான ஆனந்தத்தோடு உட்கார்ந்திருக்கும்படியான மூர்த்தி தட்சிணுமூர்த்தி. இவரும் தெற்குப் பக்கம் பார்த்துக்கொண்டுதான் ஈஸ்வரனுடைய தென்புறப் பிராகாரத்

தில் உட்கார்ந்திருக்கிறார். நடராஜரின் கோலத்தில் சடைகள் நான்கு பக்கமும் விரிந்து கிடக்கின்றன. தட்சிணாமூர்த்திக் கோலததில் அவை அமைந்து ஜடா மண்டலமாகத் தொங்கிக் கொண்டு இருக்கின்றன. அங்கே சநதிரன் தெரித்துக்கொண்டு இருக்கிறது. இங்கே ஆனந்தமாகப் பிரகாசித்துக் கொணடிருக்கிறது. ஒரு கால் பூமியில் இருக்க, இனனொரு காலைத் தூக்கிக கொணடு அங்கே கூத்தாடிக் கொண்டிருக்கிறார். ஒரு காலின்மேல் இன்னொரு காலைத் தூக்கிப் போட்டுக் கொணடு இங்கே உட்கார்ந்து கொணடிருக்கிறார். அங்கே ஆனநதமூர்த்தி; இங்கே ஞான மூர்த்தி; 'ஸத் சித் ஆனந்தம்' எனறு நாம் கேட்டிருக்கிறோம். சச்சிதானந்தம் என்று சொல்லிக் கொணடும் இருக்கிறோம், இதற்கு அர்த்தம் தெரிந்திருந்தாலும் புரிந்து கொணடு இருப்பவர்கள் சில பேர்தான் இருப்பார்கள்.

ஸத் என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். சித் என்பதுதான் ஞானம். தட்சிணாமூர்ததி காட்டிக் கொண்டிருக்கும்படியான முத்திரைக்குச் சின் முத்திரை என்று பெயர். ஆனந்தம் பொங்கி, அடஙகும்போது ஞானம் பூர்ணமாக நிறைந்திருந்கிறது எனறு அர்த்தம். ஞானம் நிறைந்து, ஆனந்தமும் நிறைந்து, அடங்கியிருக்கும்படியான தட்சிணாமூர்த்தி சந்நிதானததில்தான், அவரைப் போலவே உட்கார்ந்து கொணடு கண்ணை மூடிக்கொணடு பஞ்சாட்சர ஜபம் பணணுவார்கள் பெரியோர்கள். ஜபம் பண்ணுவது தட்சிணாமூர்த்தி சந்நிதானம. தரிசனம் பணணுவது ஆனநதக் கூத்தன் சந்நிதானம். இங்கே கண்ணைத் திறந்து கொணடு தரிசனம் பண்ணுவார்கள். அங்கே கண்ணை மூடிக்கொண்டு அந்தர்முகமாக ஜபம் பண்ணுவார்கள். பிக்ஷாடன மூர்த்தி அதோமுகமாக இரண்டு விரலைக் காட்டிக் கொண்டிருக்கும்படியான முத்திரையைச் சின்முத்திரை என்று சொல்கிறார்கள். பிக்ஷாடனமூர்த்தியின் ஒரு கையில் இரண்டு கால்களையும் தூக்கிக் கொண்டு ஒரு குட்டிமான் நிற்கும். இவர் கையை வைத்துக் கொண்டிருக்கும்படியான முத்திரையைஅது பார்த்துக்கொணடு நிற்பதுபோல் இருக்கும். 'இதோ உனக்கு ஆகாரம் இருக்கிறது பார்!' என்று சுவாமி சொல்வது போல் அந்த இரண்டு விரலையும் அதனிடம் காட்டிக்கொண்டிருப்பதுபோல இருக்கும். ஒரு புல்லை அதற்கு காட்டுகிற மாதிரி, 'உனக்கு ஒரு வஸ்து இருக்கிறது' என்று சொல்கிற மாதிரி இருக்கிறது. ரங்கராஜாதான் ஒரே தூககத்தில் இருக்கிறார்.

"நித்ராமுதராம் நிகிலஜகதீரக்ஷணே
ஜாகரூகாம்"

என்று அவர் காட்டிக் கொண்டு இருப்பது நித்திரா முத்திரை. தூக்கம் என்பது ஓர் அவஸ்தை. அந்த அவஸ்தையில் இருக்கும்படியான அடங்கின ஆனந்தத்தை வெளிப்படுத்துவது, நித்திரா முத்திரை. இப்படி அநேகம் மூர்த்திகள். ஒவ்வொரு மூாத்திக்கும் ஒவ்வொரு வகையாகத் தனி விசேஷம் இருக்கும்.

'தர்ஸநாத் அப்ரஸதஸி'

சிதம்பரம் நடராஜா தரிசனத்துக்கு உரிய மூர்த்தி. சிதம்பர தரிசனம் பணணினாலே விசேஷம் என்று சொல்கிறது இந்தச் சுலோகம். சிதம்பரததில் நடராஜர் விசேஷம். ஆலங்குடியில் தட்சிணாமூாத்தி விசேஷம். திருவாரூரில் தியாகராஜா விசேஷம். ஸ்ரீரங்கத்தில் ரங்கராஜா விசேஷம். இப்படி ஒவ்வொரு மூர்த்தி ஒவ்வொரு க்ஷேத்திரத்துக்குப் பிரதான மாக இருக்கிறது. தட்சிணாமூர்த்தி ஞானம் நிரம்பி, ஆனந்தம் அடங்கி சாந்தமாக இருக்கும்படியான மூர்த்தி. நடராஜா ஆனந்தம் பொங்கிக்கொண்டு இருக்கும்படியான மூர்த்தி, ரங்கராஜா ஆனந்தத்தில் தூங்கிக் கொணடு இருக்கும்படியான நித்திரா மூர்த்தி. இவர்கள் மூன்று பேரும் தெற்கே பார்த்துக் கொண்டு இருப்பவர்கள். இந்த மூன்று மூர்த்திகளையும் யார்யார் எந்த மூர்த்தியை ஆசிரயித்து உபாசனை செய்தாலும், தென்திசைத் தலைவனான யமனுடைய வாதனை இருக்காது.

இவர்களில் எந்த மூர்த்தியை உபாசனை பண்ணி, தியானம் செய்து அந்த மூர்த்தி நம்முடைய சித்தத்தில் வந்து ஆவாஹனம் ஆகும்படியாக, பிரகாசிக்கும்படியாகச் செய்து கொண்டாலும் அதனால் நமக்கு மரண உபாதை நிவிருத்தியாகும்; மரண பயம் நீங்கும். இப்படிப்பட்ட தத்துவத்தை வைத்துத்தான் ஆலயங்கள் கட்டி, ஆலயங்களில் இந்த மூர்த்திகளுடைய ஸ்வரூபத்தைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். ஒருவர் ஞானமூர்த்தி, ஒருவர் ஆனந்த மூர்த்தி, ஒருவர் யோக நித்திரா மூர்த்தி. இநத மூனறு மூர்த்திகளும் நமக்குத தெற்குத் திக்கிலிருந்து வரும் விரோதியின் பயத்தை ஸம்ஹாரம் செய்வதற்காகத்தான் தெற்கே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சிதம்பரத்தில் மகா கும்பாபிஷேகமும், ஸ்ரீரங்கத்தில் தெற்கு ராஜகோபுர சம்ரோக்ஷணமும் ஒரே ஆணடில் நடைபெற்றது என்பது குறிப்பிடத்தக்கது. எனவே தெற்கு பார்த்த அவ்ராஜாக்களை வழிபட்டு பலன பெறுவோமாக.



# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில உள்ள தி தி. தேவஸ்தானத்தாரின் தங்கு வசதிகளின வாடகைக் கட்டண விவரங்கள்.

| குடில்கள் வகை | வாடகை விவரங்கள் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| சிறப்பு வகை குடில்கள் | ரூ. 100/- |
| டி. பி. உட்குடில்கள் | 70/- |
| டி. பி. வெளிக்குடிலகள், III-வது வரிசையும் சேர்த்து | |
| 'ஏ' பகுதி (வெந்நீர் வசதி உள்ளது) | 20/- |
| 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| வி. வி. சி. மற்றும் எம். பி. சி. 31 மற்றும் 26 | 70/- |
| எம. பி. சி. 'ஏ' பகுதி (வெந்நீர் வசதியுடன) | 20/- |
| எம். பி. சி. 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| டி. பி. அறைத்தொகுதிகள் மற்றும் ஏ. டி. சி. அறைத் தொகுதிகள் | |
| வெந்நீர் வசதியுடன | 15/- |
| வெந்நீா வசதி இலலாதது | 10/- |
| ஏ. டி. சி. கீழ்த்தளம | |
| 'ஏ' பகுதி | 30/- |
| 'பி' பகுதி | 30/- |
| எஸ். எம், சி.; எஸ். என். சி.; ஏ. என். சி.; ஜி. என். சி.; எச. வி. சி. | |
| 'ஏ' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| 'பி' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| எச். வி. டி, சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதியுடன் | 25/- |
| எச். வி. டி. சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| பெரிய அறைத்தொகுதியுடன கூடிய எச. வி. சி. விருந்தினர் விடுதி — வெந்நீர் வசதியுடன | 50/- |
| சிறிய அறைத்தொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருந்தினர் விடுதி வெநநீர் வசதி இல்லாதது | 25/- |
| எஸ். வி. விருநதினர் விடுதி பெரிய அறைத்தொகுதி (வெந்நீர் வசதியுடன்) | 70/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மூலை அறைத்தொகுதி | 60/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றைய அறைத்தொகுதி | 50/- |
| என். ஜி. விருந்தினா விடுதி I & II | |
| மூலை அறைத்தொகுதி | 60/- |
| மற்றைய அறைத்தொகுதிகள் | 50/- |
| எச். ஆர். ஜி. முழு குடில | 250/- |
| எஸ். வி. விருந்தினா விடுதி | |
| பெரிய அறைத்தொகுதி எண; 9 மற்றும சிறிய அறைத்தொகுதி எண்: 7 மறறும 8 | 750/- |
| பெரிய அறைத்தொகுதி எண்: 1 மற்றும சிறிய அறைத்தொகுதி எண்: 6 | 750/- |
| சிறிய அறைத்தொகுதிகள் எண்: 2, 3, 4, 5, (ஒவ்வொனறும்) | 250/- |
| ஸ்ரீநிகேதன (ஒவ்வொரு அறைத்தொகுதி) (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண. 4) | 250/- |
| இந்திரா விருந்தினர் விடுதி (ஏ. சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண 2) | 250/- |
| பாலகுடீரம் (ஏ.சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி (எஸ. பி. நகர் விருந்தினர் விடுதி எண்: 3) | 250/- |
| கோகுலம் (ஏ. சி.) | 500/- |
| டி. பி. சி. மறறும் ஏ. டி. சி. குடில்களில் முதல்தளம் முழுப்பகுதி | 60/- |
| அரைப்பகுதி | 30/- |
| எஸ். என். விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 50/- |
| ராம் பகீச்சா விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 50/- |

திருமணக்கூடங்கள்

| | |
|---|---|
| எஸ. எம். சி. 260, 266, 267, 272. ஒவ்வொரு குடிலுக்கும் நாள ஒன்றிறகு | 75/- |
| ரூயா 248 | 100/- |
| கோகினேனி 226 | 100/- |
| சிதமபரம செட்டியார் குடில | 125/- |
| ஏ. டி. சி. 99 | 100/- |
| டி. பி. சி. 71, 136, 152 | 75/- |
| பாலாஜி திருமண மண்டபம் | 500/- |
| சீதாராம திருமண மண்டபம் | 1000/- |

(12-ம பக்கத் தொடர்ச்சி)

விளககப்பட்டுள்ளது. வேதம் வல்லார்களான 'கனபாடிகள்' வேதவாக்கியங்களிலுள்ள ஒவ்வொரு எழுத்தையும் அதனதன் தனமைகளை விளக்கிக் காட்டுவர். 'வர்ணக்ரமம்' என்று இம்முறைக்குப் பெயர். அதிலும் மேற்படி எழுத்துக்களின் வாசியை நன்கறிதல் சாத்தியம். 'भाषाशास्त्रं' எனப்படும் (Philology) துறையில் அனுபவமுள்ளவர்களுக்கும் இதனுண்மை நன்கு தெரிந்ததே. ஆனால் சாதாரணமான ஜனங்களுககு இதெல்லாம தெரியாதே! மொழியை உபயோகிபபவர்களில் பெரும்பாலானவர்கள் அவர்கள் தானே! அதனால் கரைபுரண்டோடும் ஆற்று வெள்ளம் போல் லோகவ்யஹாரம் கட்டுக்கடங்காமல் ஓடிக்கொண்டே இருக்கிறது. மிகமிகச் சிலரேயான கோஷ்டியில் இது போன்ற விஷயஙகளை ஓயாமல் 'சர்ச்சை' செய்து கொள்ளலாம். நூல்களில் எழுதியும் வைக்கலாம். இதெல்லாம் உலக வழக்கைச் சிறிதும் அசைத்து விடமுடியாது.

இதில் மறறொரு விசித்திரமான நிலைமை 'आर्यः' என்னும் இச்சொல் மக்களுள் ஒரு இனத்தைச சார்ந்தவர்களைக் குறிப்பிடுவதாகப் பழங்காலத்தில் இருந்தது. சொல்லின் வடிவம 'आर्यः' (ஆர்ய:) என்று காலப போக்கில் மாறுதலடைந்து விட்டது! அதுவே போல் இதன பொருளிலும் மாறுபாடு தோன்றிவிட்டது!! 'आर्यः' என்னும் சொல்லுக்கு 'மூத்த சகோதரன்-அண்ணா' என்னும பொருள் பிற்காலத்திய இலக்கியங்களில் தோன்றிப படிந்து விட்டது. ஸ்ரீமத் ராமாயணததில அயோத்யா காண்டத்தில், கானகமேகின ஸ்ரீராமசந்திரனை நாட்டுக்கு மீட்டு வருவதற்காக அருமைத் தம்பி பரதன் காட்டுக்குப் போன கதை வருகிறது. சித்திர கூடத்தில் இராமனுக்கும் பரதனுக்கும் சந்திப்பு ஏற்பட்டது. பலவாறாக வேணடினான் பரதன். இராமன இசையவில்லை. பெருந்திரளான ஜனங்கள் கூடி இவ்வறபுதத்தைக் கவனித்துக் கொண்டிருநதனர். வேறு வழியில்லாமல் பரதன் 'சத்யாகரகம்' செய்தான. இராமனுடைய பாதார விந்தங்களின்கீழ், தரையில் கிடந்தான். 'இராமன் நாட்டுக்குத் திருமபுவதாக உறுதியளிக்கும் வரையில் நான் எழுந்திருப்பதில்லை ஆகாரமின்றி-நீர்கூட அருந்தாமல் கிடப்பேன' என்று ப்ரதிஜ்ஞை செய்தான். அப்போதும் இராமன் நாட்டுககுத் திரும்ப இசையவில்லை. பரதன் அங்குக குழுமியிருந்த மகாஜனங்களைப் பார்த்து 'किमार्यंनानुशास्थ?' எனறு கேட்கிறான். 'அண்ணனை நீங்கள் (என் வேண்டுகோளுக்கு இசையும்படி) கட்டளை இடாமல் இருப்பது ஏன்?' என்பது பொருள். இங்கு மூத்த ஸகோதரனை 'आर्य.' என்னும் சொல்லாலேயே வால்மீகி முனிவர் குறிப்பிடுகிறார்.

அவ்வாறே உலகப்பிரசித்தி பெறறது 'உத்தரராம சரிதம்' என்னும் நாடகம். பவபூதி (भवभूतिः) மஹாகவி இதை இயற்றியவர். இதிலும இதே போன்ற ப்ரயோகம் இடம் பெற்றுள்ளது. வால்மீகி முனிவருடைய ஆச்ரமத்தில் சீதையின் புதல்வர்களான 'லவனும் குசனும்' இருந்தனர். தசரதருடைய பட்டமகிஷிகள மூவரும் ஒரு காரணததால் அங்கு வந்து சேர்ந்தனர். லவன மட்டும் தனியாக அவர்களுக்கு ஸமீபத்தில வந்தான். கௌஸல்யை அவனை அருகில் அழைத்து விசாரித்தாள. இராமனுடையவும சீதையினுடையவும் அங்க அடையாளங்களின் அமைப்பு முழுமையாக இந்தச் சிறுவனுடைய உடலில் காணப்படுகிறது. சீதையை இரணடாவது முறையாகக் காட்டில் லக்ஷ்மணன் கொணடுவிட்டது இந்த வால்மீகி முனிவருடைய ஆச்ரமத்துக்கு ஸமீபத்தில் தானே! அனைவருக்கும் மனதில் ஒரே குழப்பம். கேள்வி மேல் கேள்வியாக லவனைக் கேட்கிறாகள். 'எங்களுக்கு அப்பா-அம்மா-எல்லாம் வால்மீகி முனிவர் தான். நாங்களிருவரும் இரட்டையர். முதலில் பிறந்ததனால் நான் இளையவன். எனக்குப் பிறகு பிறந்ததனால் எனககு அண்ணனாகிய 'குசன்' என்னும் மற்றொருவரும் இங்கிருக்கிறார்' என்று அந்தச் சிறுவன் தக்கவாறாக ஸமாதானம் சொல்லுகிறான. இங்கு 'अस्त्यार्य कुशो नाम' என்னும் வாக்கியம் உள்ளது. 'அண்ணன்' என்பதை 'आर्य' என்னும் சொல்லால் மகாகவி குறிப்பிடுகிறார். இப்படி ஏராளமாக உள. இவ்வளவில் நிற்போம.

இந்த அய்யா - ஐயர் - குழப்பதிற்குக் கட்டுக்கடங்காத உலக வழக்குதான காரணமென்பதையும், 'அய்யர்' என்பதுதான் பழமையான சரியான சொல் என்பதையும் ஒருவாறாக உணர்நதோம். பிரசித்தி பெற்ற இலக்கியங்களிலுங்கூட இந்தக் குழப்பம் இடம் பெற்றுவிட்டது. இரண்டு உதாரணங்களால் இதை நிரூபணம் பண்ணுவோம். தேனினுமினிய தனது செஞ்சொற்கவிகளால் உலகை உய்வித்த ப்ரபன்ன ஜனஸந்தான கூடஸ்தரான நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில்,

**"கன்மமன் றெங்கள் கையில பாவை**
**பறிப்பது கடல்ஞாலமுண்டிட்ட,**
**நின்மலா! நெடியாய்! உனக்கேலும்**
**பிழை பிழையே,**
**வன்மமே சொல்லியெமமை நீ விளை**
**யாடுதி அது கேட்கிலென்னைமார்,**
**தன்மபாவமென்னார் ஒரு ஞான்று**
**தடி பிணக்கே"**

(திருவாய்மொழி 6-2-7)

என்பது ஒரு பாசுரம். ஆழ்வார் நாயிகா பாவத்தில் தோனறிய பாசுரமிது. தலைமகள் தனது காதலன் செய்யும் காரியங்களைத் தகாதனவாக எடுத்துக் கூறி அவனைக் கடிந்து கொள்கிறாள். 'நீ இபபடியே தவறுதலான செயல்களைப் புரிகினறாய். எனது அண்ணன்மார் காதில் இது விழுமாகில் ஒரு நாள் தடியடிச் சண்டையில் கொண்டு போய்விடும்' என்று எச்சரிக்கை விடுகிறாள். இங்கு

# வன்னியும் வழங்கு தசமியும்

மருதுவைப் போல இறைவனுக்கு உகந்த மரங்களுள் வன்னிமரம் ஒன்ருகும். இதனை இன்றும் தமிழ் இலக்கியங்கள் நின்று சான்று பகர்கின்றன. 'இதேபோல் மருது மற்றும் வன்னி மரங்களைக் காரண மாகக்கொண்டு தமிழ்நாட்டில் பல ஊர்களின் பெயர்கள் அமைந்துள் ளன. இன்னும் சொல்லப்போனல் பலர் தங்கள் குழந்தைகளுக்கு மேற படி மரங்களைக் காரணமாகக்கொணடு "மருதப்பன" என்றும் "வன னிமுத்து" எனறும் பெயரிட்டு அழைப்பதைக் கண கூடாகக் காண லாம். இவைகள் எல்லாம் வன்னிமரம் எவ்வாறு தமிழ் மக்களின் வாழ் வோடு இணைந்திருந்தது எனபதை விளக்குவனவாகும்.

அடுத்து வழங்கு தசமி என்றுஇங்குக் குறிப்பிடுவது சிறப்பாகவழங கப்படும் விஜய தசமியாகும். மற்றவைகளை விட இந்த தசமி சிறப் பாக வழங்கப்படுவதால் வழங்கு தசமி எனக்கொள்ளப்பட்டது.

மேலே சொல்லப்பட்ட வன்னிமரத்திற்கும் விஜயதசமிககும் உள்ள தொடர்பினை இங்குக் காண்போம்.

அனறைய ஆதிகாலதது மனிதன் வன்னி மரத்து கிளைகள் இரண டை எடுத்து ஒனறொடொன்று தேய்க்க நெருப்பு உண்டாவதைக் கண்டான். அது முதல் வனனிமரத்தை நெருப்புக்குணடான மர மாகக் கொண்டான். நெருப்பு ஐம்பூதங்களுள் ஒனருகும. எனவே வன்னிமரத்திற்கும் ஐம்பூதங்களுககும தொடர்பு உண்டு எனறு சொன்னல் அது மிகையாகாது.

உருக்மினி கண்ணனை எண்ணி வன்னிமரத்தை வணஙகி கண்ணனை அடையப் பெற்ருள் எனபது பாரதம் கூறுவதாகும். அர்ஜுனன் தனது காண்டீபத்தை வன்னிமரத்தில் பத்திரப்படுத்தியிருந்தான் என்பதும் மகாபாரதம் சொல்லுவதாகும். ஸ்ரீராமபிரான சீதையைத் தேடப் புறப்படும முன்பு வன்னிமரத்தை வணங்கிச் சென்ருா என் றும் வரலாறு கூறுகிறது.

அர்ஜுனன் மேலே கணடவாறு வன்னிமரததில் வைத்திருந்த காண்டீபத்தைக் கொண்டு பசுக்களைக் கவர்ந்து சென்ற கௌரவர் களை எதிர்த்துப் பெற்ருன். பசுக்களைத கோமக்களிடம் திரும்ப ஒப் படைத்தான். அன்றைய வெற்றியைக குறிப்பிடும் வணணம் அன் றைய தசமி தினத்தை விஜய தசமி என வழங்கினர். மேற்படி வெற்றியுடன் தொடர்புடைய வனனிமரத்தையும் அனறு முதல அத்தினத்தன்று வழிபடுவதை வழக்காக்கினர். இதுவே வனனிமரத் திற்கும விஜய தசமிக்கும் உள்ள தொடாபாகும.

திருப்பதி பெருமாளுக்கு வன்னிமர பிரக்ஷணத்திற்குப் பிறகே பிரும்மோத்சவம ஆரம்பமாகிறது. காயத்ரி க்ஷேத்திரஙகளில் தல மரம வனனியே எனபன மேறசொனன விபரங்களை மேலும உறுதிப் படுத்துவதாகும.

வன்னிமரம் ஆண்டவனின் அருள் கொடுக்கும மரம் என்பதால் மானிடரின பிணி தீர்க்கும் மருந்தானது போலும். நாமும் வனனி மரத்தைவிஜயதசமியன்று மட்டும் அன்றி நாளும்வலம் வந்து அதன் பயனைப் பெறுவோம்.

— முடிவை முத்து.

என் அண்ணன்மார் என்பதை 'என் ஐமார்' எனனும சொல்லால் குறிப் பிடுகிருன்.

அவ்வாறே சூடிக கொடுதத சுடாக கொடியாகிய ஆணடாள அருளிச செயத நாச்சியாா திருமொழியிலும் காணலாம்:

"வரிசிலை வாணமுகத தெனனை மாா
தாம் வந்திட்டு
எரிமுகம் பாரித்தெனனை முனனே
நிறுத்தி,
அரிமுகனச்சுதன் கைமமேலென கை
வைத்து,
பொறி முகந்தட்டக் கனக் கண்டேன
தோழீ! நான்"
(நாச்சியார் திருமொழி 6-9)

என்பது ஒரு பாசுரம். ஆணடாள ரங்க மன்னரை மணந்து கொண்ட தாகக் கனவு கணட விதத்தைத் தன் தோழியிடம கூறும் 'வாராணமா யிரம்... .....' எனறு தொடங்கும் பதிகத்திலுளளது இந்தப் பாட்டு. ஸ்ரீ வைஷ்ணவர்கள் கல்யாண காலத தில் மணமக்களிருவரும் எதிரெதி ராக அமர்ந்து, இநதப் பதிகத்தைப் பாடிக்கொண்டு தேங்காய்களை உருட்டவேணும். திருமணத்தின் இது ஒரு முக்கியமான பகுதி. இஃதில்லாவிடில் திருமணமே சரியாக நடந்ததாகக் கருதப்பட மாட்டாது. ஸ்ரீவைஷ்ணவ குலத்தில் அவதரிதத ஆண்டாள், தனது குலக்ரமாகதமான திருமண நிகழ்ச்சியையே கனவில கணடாள். அதையே இந்தப் பதிகத தில பாடியிருககிருள.

மணமகள் இருவரும அக்நியை வளர்த்துக்கொண்டு விற்றிருப்பர். பெண்ணின உடன்பிறநதவன் நெற பொறியை எடுத்து அவளது கைகளி ரணடிலும் நிரப்ப வேணடும். அந்த நிலையிலேயே மாப்பிள்ளை தனது இரு கைகளாலும் மணப்பெண்ணின் கை களிரண்டையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு அந்தப்பொறி அக்நியில் விழுமாறு ஹோமம் பண்ணவேணும். இது ஒரு நிகழ்ச்சி. இதுவே இந்தப்

பாசுரத்தில் கூறப்படுகிறது. இங்கு என் 'அண்ணன்மார்' என்னுமிதை 'என்னைமார்' என்றே ஆண்டாளருளிச் செய்திருக்கிறுள்.

தமிழ் மொழியில் முதல் வேற்றுமை பலவாருக உள்ளது. 'ஆடு-மாடு-காக்கை-வண்டி-நொண்டி' இத்யாதிகளில் பெயர்ச் சொல்லின் வடிவமே முதல் வேற்றுமை யொருமையையும் தன்னுள் கொண்டிருக்கும். (Understood) 'அவன்-இவன்-அவர்-இவர்-அவள்-இவள் - அது-இது-'இப்படிப்பட்ட இடங்களில்' ன்-ள்-து-ர்-என்பவை முதல் வேற்றுமையின் ஒருமையாக உள. இரண்டாம் வேற்றுமை 'ஐ' என்பதாம். இது சில சொற்களில் ஸகஜமாகப் பொருந்தி விடும். 'அவனை - இவனை - அவளை - இவளை அவரை - இவரை' - இத்யாதிகளைக் காண்க. மரம்-'ஐ' என்னுமிடத்தில் 'மரத்தை' என்றுவரும். சொல்லுக்கும் வேற்றுமை யுருபுக்கும் இடையில் 'சாரியை' எனப்படும் ஒரு எழுத்து சேர்த்துக் கொள்ளப்படும். இப்படிப் பற்பல மாறுதல்கள் உள்ளன. இந்த 'அய்யர்-ஐயர்-அய்யன்-ஐயன் விஷயத்திலும் இந்த இலக்கண விதிகள் புகுந்து பெரும் குழப்பத்தை உண்டு பண்ணியிருக்கின்றன. 'அர்ய:' என்னும் ஸம்ஸ்க்ருத பதத்தின் சரியான தமிழ்ச்சொல் 'அய்ய' என்பதே. இதில் முதல் வேற்றுமை யொருமையான 'ர்-ன்' என்பதைக் கூட்டினுல் அய்யர்-அய்யன் என்று சொல்லின் வடிவம் அமையும். இது சரியான மார்கம்.

'ஐய' என்னும் ஸம்ஸ்க்ருதபதமான 'அர்ய:' என்பது தமிழில் திரிந்து வந்துள்ளமை ஏற்கெனவே காட்டினேம். அதிலும் இந்த முதல் வேற்றுமை யொருமையாகிய 'ர்-ன்' இணைந்து 'ஐயர்-ஐயன்' என்று சொல்லின் வடிவத்தை உருவாக்கிவிட்டது. 'உயர்ந்தவன் - சிறந்தவன் - அண்ணன்' என்றெல்லாம் பொருள்படும் இந்தச் சொல் 'பத்மபூஷன்' 'பத்மஸ்ரீ' என்பன போல் பட்டப் பெயராகவும் தமிழ் நாட்டில் வழங்கியதுண்டு. தஞ்சாவூரில் நாயக்கன் மார்கள் அரசு செலுத்திய காலத்தில் இவ்வாறிருந்திருக்கிறது. 'ரகுநாத நாயகன் அய்யன்' 'சோணத்ரி நாயகன் அய்யன்' 'குமாரதாத தேசிகன் அய்யன்' என்றிப்படிப் பலவற்றையும் அக்காலத்திய சாஸனங்களில் காணலாம்.

இந்த 'ஐயன் - ஐயர்' என்னும் சொற்களில் மற்ருெரு குழப்பம் காலப் போக்கில் இடம் பெற்று விட்டது. 'காக்கை-ஐ-காக்கையை' 'குடை-ஐ-குடையை' என்னுமிடங்களில் பெயர்ச் சொலுக்கும் வேற்றுமையுருபுக்கும் இடையில் 'ய' கரம் சாரியையாக வருகிறதல்லவா? அதுவே போல் இந்த 'ஐயன்-ஐயர்' என்னுமிடத்திலும் 'ய' கரம் 'சாரியை'யாகக் கொள்ளப்பட்டு விட்டது. வேற்றுமையுருபை விலக்கிய பெயர்ச் சொல்லின் உண்மையான வடிவத்தைக் கூறும்போது 'சாரியை'யாக வந்த எழுத்தும் விலகிவிடும். 'காக்கையை' என்பது 'காக்கை' என்றே எஞ்சி நிற்கும்.

இதேவழியில் 'ஐயன்-ஐயர்' என்னுமிடங்களில் முதல் வேற்றுமையுருபாகிய 'ன்-ர்' என்பதை விலக்கினுல் சாரியையாகக் கொள்ளப்பட்ட 'ய' கரமும் விலகிவிடும். 'ஐ' என்பதே சொல்லின் வடிவமாக எஞ்சி நிற்கும். இது ஒரு அதிர்ச்சிகரமான மாறுதல். ஆனுலும் தவிர்க்க முடியாதபடி வழக்கில் வந்துவிட்டது. இதை அடியொற்றியே நம்மாழ்வாரும், ஆண்டாளும் 'என்ஐ மார்' என்று ப்ரயோகித்துள்ளனர். இங்கு 'ஐ மார்' என்பதில் 'மார்' என்பது 'நாயன் மார்' என்னுமிடத்தில்போல் மரியாதையைக் காட்டுவதாகும். 'ஐ' என்பது மட்டுமே சொல்லின் வடிவமாக எஞ்சி நிற்கிறது.

வியாஸம் மிகவும் நீண்டுவிட்டது. மற்றும் பல விஷயங்கள் ஈண்டு அவசியமாகச் சொல்லவேண்டியவை உள. அவற்றை விடுத்து, 'அய்யங்கார்-ஐயங்கார்' என்பது போல் 'கார்' என்னும் பகுதி இதன் மேல் ஏறி நிற்பதன் தத்துவத்தை மட்டும் சுருக்கமாக விளக்கிக் கட்டுரையை முடிப்போம்.

தெலுங்கு பாஷையில் தோன்றிய இந்தச் சொல் தமிழிலும் தொத்திக் கொண்டுவிட்டது. பழங்காலத்தில் தெலுங்கு தேசம் - தமிழ்நாடு - என்னும் பாகுபாடு இல்லாதிருந்தது. தெலுங்கர்கள் தமிழையும்-தமிழர்கள் தெலுங்கையும் நன்கறிந்தவராக இருந்தனர். தங்குதடையின்றிக்கே யாவரும் இருமொழிகளையும் ஸஹஜமாக வழங்கி வந்தனர்.

தெலுங்கர்கள், மரியாதையைக் காட்டுவதற்காக, பெயர்ச் சொல்லுடன் 'காரு' என்பதைக் கூட்டுவது வழக்கம். 'மாமகாரு' 'அம்மகாரு. என்றிப்படிப் பலவும் காணலாம். அவ்விதமாகவே 'அய்யகாரு - ஐயகாரு' என்று இந்த 'அய்ய-ஐய' என்னும் சொற்களின் மேலும் இந்த 'காரு' என்னும் பகுதி ஏறிவிட்டது. தமிழர்களின் வழக்கில் முதல் வேற்றுமையொருமையாகிய 'ன்' என்பதும் இதன் நடுவில் புகுந்து கொண்டு விட்டது. 'அய்ய-ன்-காரு' 'ஐயன்-காரு என்றிப்படி உச்சாரணம் உருவாகிவிட்டது. 'டு-முலு-னுக உ'' என்பவை தெலுங்கில் முதல் வேற்றுமையொருமையின் வடிவங்கள். அதனுல் அவர்கள் 'அய்ய-காரு' 'ஐயகாரு' என்று வழங்குவர். தமிழர்களுக்கு 'அய்ய-ன்' ஐயன்' என்று 'ன்' முதல்வேற்றுமையொருமையாக இணைந்து விட்டபடியால் 'காரு' என்பதன் முடிவிலுள்ள 'உ' கரம் நீக்கப்பட்டு, 'அய்யன்-கார் - ஐயன்-கார்' என்றே வழங்கப்பட்டது. இதிலும் 'ன்' என்னுமிது அடுத்து வரும் 'கார்' என்பதுடன் கூடும்போது 'ங்' என்று மாறிவிடும். அதனுல் 'அய்யங்கார்' 'ஐயங்கார்' என்றவாறுன சொற்கள் தோன்றி விட்டன. தமிழர்களான 'ஆசார்ய புருஷர்கள்' பலர் தெலுங்கு தேசத்திலும் வாழ்ந்து வந்தனர்.

இன்னும் அவர்களுக்குத் தெலுங்கு தேசத்தில் பல் சிஷ்யர்கள் இருக்கிறுர்கள். அவர்கள் தமது ஆசார்யர்களை மரியாதையாகவே அழைப்பர். அங்கிருந்துதான் இந்த 'கார்' என்னும் சொல் தமிழ்நாட்டுக்கு வந்தது. இதில் மற்ருெரு விநோதம். இச்சொல், பொருத்த

# தனிப்பெருமை மார்கழிக்கே!

தலைவன் :— வெடவெடக்கும் குளிரிருக்க
விடியாமப் பொழுதிருக்க
படபடத்து எழுந்ததென்ன - செல்லமமா
பகருவமாய் சொல்லவேணும் - செல்லமமா

தலைவி :— படமெடுத்த பாம்பின்மேலே
பள்ளிகொண்ட பரநதாமன்
திடமாகக் காட்சிதர - செல்லையா
தேர்ந்ததிந்த மாதமையா - செல்லையா

தலைவன் :— மார்கழியும் பிறநதாச்சு
மகிமையெல்லாம் பிறநதாச்சு
பார்முழுதும் பக்திகொண்டே — செல்லம்மா
பாபமெல்லாம் போசகலுண்டே—செல்லம்மா

தலைவி :— ஊர் கூடிப் போகுதையா
நீராடி வருகுதையா
சீர் பெறவே நாமுமபோய்—செல்லைய்யா
சேவிக்க வேணுமையா—செல்லைய்யா.

தலைவன் :— சிவநடனக் காட்சியுமே
சேருமிந்த மாதந்தானே
சிவஜோதி பார்த்திடுவோம்—செல்லம்மா
சீக்கிரமா புறப்படுவோம்—செல்லம்மா

தலைவி :— சிவன்வேறுய கணணன்வேறுய்
சிந்தைநீ கொள்ளாதே
சிவசக்தி திருச்சக்தி—செல்லையா
சேர்நததிந்த உலகசக்தி—செல்லையா

தலைவன் :— அரனுகி அரியாகி
அருளுவதைப் பாருநீயே
திறனெல்லாம் ஒன்றென்றே—செல்லம்மா
திருப்பாதம் பணிவமின்றே—செல்லம்மா

தலைவி :— புரியாத பேருக்கெல்லாம்
புரியவைக்க வேணுமென்று
ஹரிஹரனை துணட்ாம்—செலலையா
அனபோடு பணியவேண்டும்—செல்லையா

தலைவன் :— மனநதூய்மை கொண்டேதான்
தினம்பகதி செய்தால்தான
மனமுவநது தெய்வந்தான—செல்லம்மா
மங்கலமும் தந்திடுந்தான்—செல்லம்மா

தலைவி :— மனங்கோணு அன்பினிலே
தானேங்கு மின்பததாலே
தன தானயம் மிகுமாமே—செல்லையா
"தனிபபெருமை மாாகழிககே"—செல்லையா.

பரமக்குடி. வெ. சுநதரம.

மில்லாத இடங்களிலும் சேர்ந்து வழங்குகிறது. 'அம்மங்கார் - ஜீயங் கார்' என்றும் வழங்குகின்றனர். 'அம்மகாரு' 'ஜீயகாரு' என்னும் தெலுங்கு உச்சரிப்புதான் இதற்கா தாரம். 'அய்யன்-காரு என்பது 'அய்யங்கார்' என்று ஆவது தகும். அம்ம-ஜீய-என்னும் சொற்களில் இந்த வாய்ப்பு இல்லை. அம்மகார்-ஜீயகார்-என்றுதான் இது இருக்க வேணும். 'அய்யங்கார்' எனனும சொல்லின ஞாபகத்தினலேயே தற் போதைய உசசாரணம் தோன்றி விட்டது. 'ஐயங்கார் குளம்' 'அம் மங்கார் குளம்' என்று இரண்டு குளங்கள் ஆங்காங்கு கிராமங்களில் இன்றும் உள்ளன.

நாட்டுப்புறங்களில் ஒவ்வொரு ஊரிலும் கிராமதேவதையான அம் மனகோவில் இருக்கும. நாட்டுமக் கள அம்மனை வழிபடுவார்கள். அக்ரஹாரங்கள் உள்ள இடங்களில விஷ்ணுகோவிலும இருக்கும். அந் தணர்கள் இவற்றில் பூஜை செய்து வருவார்கள் அந்தணர்கள் வஸிக் கும் தெருவுககு 'ஐமார்' தெரு 'ஐய மார் தெரு' என்று பெயர் வழங்கும். 'ஐ' என்னும் சொல், 'அண்ணன' என்று பொருள்படும் என்பதை முன் னமே கூறியுள்ளோம்; ஐமார் தெரு - என்பதற்கு அணணன்மார் தெரு என்று பொருள் தேறுகிறது. அம்மன் எனப்படும் தெயவம் துர்கா தேவியின் அவதாரம். கிருஷ்ணனு டைய ரூபமே விஷ்ணுவினுடையது. மதுரையில் வஸுதேவருக்கும் தேவ கிக்கும குழந்தையாகப் பிறந்தார் கிருஷ்ணன். சிறிது நேரம் கழிநத பின நந்த கோகுலததில் யசோ தைக்கு ஒரு பெண் குழந்தை பிறந் தது நள்ளிரவில் குழந்தைகளின (ஏ) மாற்றம நடந்தது. கிருஷ் ணன் கோகுலத்தில் யசோதையின் ஆதரவில் வளர்நதார். அநதப பெண் குழந்தை மதுரைக்கு எடுத்து வரப்பட்டது. விஷ்ணுவின் அம்ச மான கிருஷ்ணனுக்குப் பின் பிறந்த மையால் துர்காதேவி தங்கையாகி விட்டாள். அவளுக்கு முன பிறந்த மையால் கிருஷ்ணன அண்ணனுகி விட்டார் இந்த அடிப்படையிலும விஷ்ணுவை வழிபடும அநதணர்கள் 'ஐமார்-ஐயமார' என்று வழங்கப்படு வது பொருத்தமே.

'अर्यः' என்னும் புராதனமான பதம் பிற்காலத்தில் பற்பல உருவ மாக மாறி மாறி இன்றளவும் வழங்கி வருகிறது. ஸ்ரீமகாவிஷ்ணு வின் தசாவதாரங்கள் போல இது வும் பல அவதாரங்கள் எடுத்திருக் கிறது. ஆனாலும் இதன் 'சாயல் மற்ற சொற்களிலும் குன்றாமல் படிநதிருப்பதைக் காண்கிறோம். அய்யர்-அய்யங்கார்-ஐயர்-ஐயங்கார் எனனும் சொற்களுக்கு மூலாதார மானது 'अर्य' என்னும் இந்தச் சொல் லேதான். இதை எமது சிற்றறிவுக் கெட்டியவரை ஆராய்ந்து இக்கட்டு ரையை எழுதினேம்.

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 17

பரந்து விரிந்த இந்தப் பிரபஞ்சத்தையும் அதன் நடைமுறையையும் கொஞ்சம் கூர்ந்து கவனித்தால் அவற்றைப் படைத்துக் காக்கும் அந்த இறைச் சக்தியின் பெருமையை நாம் நன்கு உணரலாம். எத்தனை எத்தனை கிரகங்கள்!...இத்தனையும் நெறி பிசகாது ஒன்றையொன்று கவர்ந்திழுத்துச் சுற்றிச் சுழல்கின்றனவே. என்ன அருமை! எத்தனை எத்தனை வகை உயிர்கள்! அத்தனையிலும் ஒரு அழகு. ஒரு மாட்சிமை, ஓர் ஒழுங்குப்பாடு, ஒரு கவர்ச்சி மிளிர்கிறது. இத்தனையையும் உண்டாக்கிக் காக்கும் சக்தியே அந்த ஈசுவரன். ஈசுவரனை வழிபடுவது என்பது அவன் படைத்த இந்த இயற்கையைப் போற்றுவதற்கு நிகராகும். மாறாக இயற்கையைப் பேணிப் பாதுகாத்துப் போற்றுவது என்பதும் இறை வழிபாடு அல்லது ஈசுவர ஆராதனை ஆகும்.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.S.c., M.Phil.,
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

நம்மில் பலர் ஈசுவர ஆராதனை வேறு, தத்தம் கடமையை அதாவது தொழிலைச் செய்வது வேறு எண்ணுகின்றனர். அது தவறு. செய்யும் கடமையை அதாவது செய்தொழிலை ஈசுவர ஆராதனையாக மாற்றலாம் என்பதையே நம் நாட்டில் வாழையடி வாழையாகத் தோன்றிய சான்றோர்கள் பலரது புனித வாழ்வு நமக்கு விளக்கிக் காட்டுகிறது.

'ஸ்வகர்மணு தமப்யர்ச்ய
ஸித்திம் விந்ததி மானவ: |'

என்ற வாக்கியம் 'தனது செயலால் அவனை (இறைவனை) வழிபட்டு மனிதன் பெருநிலையை அடைகிறான்', என்று பொருள்படுகிறது. நாவிதன், வேளாளன், குயவன் போன்ற பற்பல தொழிலைச் செய்தவர்களும் மிகச் சிறந்த பக்தர்களாகத் திகழ்ந்திருக்கிறார்கள். மனத் தூய்மையே ஒருவனை மேலோனுக்குகிறது. செய்யும் தொழில் அல்ல. செய்யும் தொழிலை ஈசுவர ஆராதனையாகச் செய்யும்போது அவனறியாமலேயே சிறந்த யோகியாக ஆகிவிடுகிறான்.

ஸ்வதர்மமே சிறந்தது என்ற கருத்தை அடுத்த சுலோகத்தில் பகவான் வலியுறுத்துகிறார்.

ச்ரேயான் ஸ்வதர்மோ விகுண:
பரதர்மாத் ஸ்வனுஷ்டிதாத் |
ஸ்வபாவ நியதம் கர்ம
குர்வனாப் நோதி கில்பிஷம் ||
(18-47)

"நிறைவாகக் கடைப்பிடிக்கும் பரதர்மத்தை விடக் குறைவாக அனுஷ்டிக்கும் ஸ்வதர்மம் சிறந்தது. சுவபாவத்தில் அமைந்த கர்மத்தைச் செய்பவன் கேட்டை அடைய மாட்டான்".

தத்தம் இயல்புக்கேற்ற கர்மத்தைச் செய்வது ஒருவனுடைய ஸ்வதர்மம் ஆகிறது. தமக்கு ஒவ்வாத அதாவது தமது ஸ்வபாவத்திற்கு ஒவ்வாத பிறருடைய கர்மம் பரதர்மம் ஆகிறது. நமது சுவபாவம் எத்தகையது என்பதை நன்கு ஆராய்ந்து அதற்கேற்ப நமது செயல்களில் ஈடுபடுவோமேயானால், நமக்கு உள்ளே அடங்கியிருக்கும் திறமைகள் வெளிப்பட்டு மிளிர வாய்ப்புகள் அதிகரிக்கும். "ஸ்வதர்மம்" ஒருவரது ஸ்வபாவத்தை அடிப்படையாகக் கொண்டது. ஒருவரது 'ஸ்வபாவம்' அவரது பெற்றோர், சூழ்நிலை, சேர்க்கை, பெறுகின்ற கல்வி போன்ற பல அம்சங்களின் அடிப்படையில் அமைகின்றது.

ஒரு வகையில் பார்த்தால் நாம் செய்யும் எந்தக் கர்மத்திலும் குறை சிறிது இருக்கத்தான் செய்யும். அப்படியாயின் பிறரது கர்மத்தில் நாம் ஏன் மயங்க வேண்டும்? இக்கரைக்கு அக்கரை பச்சை எனபது பழமொழி. அக்கரைக்குச் சென்று பார்த்தால் அங்குள்ள மேடு பள்ளங்களும், குறைகளும் தெரிய வரும். நமக்கு நமது சிறிய குடிசையில் கிட்டும் அமைதியும் ஆனந்தமும், பிறருடைய பெரிய பங்களாவில் கிட்டுமா? நிச்சயம் கிட்டவே கிட்டாது. புறத்தோற்றத்தின் கவர்ச்சியைக் கண்டு நாம் நமது மனத்தைப் பறிகொடுத்து விடக்கூடாது.

இதற்கு நாம் சில நடைமுறை உதாரணங்களைக் கூறலாம். டாக்டர் பயிற்சியும் பட்டமும் பெற்ற ஒருவன் தனக்குப் பேச்சுத் திறமை இருக்கிறதென்று வக்கீலாக முயலக் கூடாது. ஆசிரியத் தொழிலில் இயற்கையாகவே திறமையும் விருப்பமும் உள்ளவன் அதிகப் பணம் கிடைக்கும் என்பதற்காக வியாபாரத்தில் ஈடுபடக்கூடாது. விருப்பத்தாலோ அல்லது வெறுப்பினாலோ தூண்டப்பெற்று ஒருவன் தன் தொழிலை மாற்றுவது தகாது. ஏனெனில் அத்தகைய முயற்சியால்

(43ம் பக்கம் பார்க்க)

# இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்

ஸ்ரீரங்கம் கே. பிச்சுமணி அய்யங்கார்
M.A.,

வைணவம் தழைக்கப் பாடுபட்ட பெரியோர்களில் தலைசிறந்தவராகக் கருதப்படுபவர் திருவரங்கத்தமுதனார். ஸ்ரீராமாநுஜர் காலத்தில் வாழ்ந்த அப்பெரியார் ஸ்ரீ ராமாநுஜரின் புகழை "இராமாநுச நூற்றந்தாதி" என்ற நூலில் வருணித்துள்ளார். திருமால் எழுந்தருளியிருக்கும் எல்லாக் கோயில்களிலும் உற்சவங்களின் கடைசி நாளில் அந்நூலை ஸேவிப்பது வழக்கம். ஸேவிப்பது என்றால் அடியார் குழாங்களுடன் கூடி இசையுடன் பாடுவதாகும். அந்நூலின் கடைசியில் "சாற்றுமறை"ப் பாசுரங்களாக மூன்று பாசுரங்கள் உள்ளன. அம்மூன்று பாசுரங்களில் முதலிலுள்ள பாசுரத்தின் ஆரம்பமே இக்கட்டுரையின் தலைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளது. இனி, பாசுரம் முழுவதையும் ஸேவிப்போம் :—

" இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்
மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம் மாயனுக்கென்பர்
நல்லோர் அவை தம்மொடும் வந்
திருப்பிடம் மாய னிராமா நுசன்
மனத்து இறைவன் வந்
திருப்பிடம் என்த னிதயத்துளளே
தனக்கின்புறவே "

வைகுந்தம், வேங்கடம், மாலிருஞ்சோலையென்ற தலங்களில் திருமால் நித்யவாஸம் செய்கிறான். அத்திருமாலை அடிபணியும் இராமாநுஜர் அடியேனை அநுக்ரஹிப்பதற்காக எனது இதயத்தில் எழுந்தருளியிருக்கிறார் என்பது பதவுரையாகும். ஆனால் இப்பாசுரத்தில் ஆழ்ந்த பொருள் உள்ளதை அறிவாளிகள் உணர்வர்.

என்ற மந்திரமாகும். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆசார்யர்கள் உபதேசிக்கும் மந்திரங்கள் மூன்று. திருமந்திரம், த்வயம், சரம ச்லோகம் என அவை கூறப்படும். உடையவரென்று எல்லோராலும் போற்றப்படும் இராமாநுசர்தான் திருமந்திரத்தை எல்லோருக்கும் பயன்படும்படிப் பரக்க உபதேசித்தருளினார்.

ஆகவே அவர் அருளிய திருமந்திரத்தின் பொருளை நாம் எல்லோரும் நன்கு உணர முயற்சிக்க வேணடும்

ஓம் என்றும் நமோ என்றும் நாராயணாய என்றும் மூன்று சொற்கள் உள்ளன. ஓம என்ற சொல்லில் ருக்வேத ஸாரமான 'அ' காரமும், யஜுர்வேத ஸாரமான 'உ' காரமும், ஸாமவேத ஸாரமான 'ம' காரமும் உள்ளது. "அ" என்பது திருமாலைக் குறிக்கும். "அ" கரத்தில் நான்காம் வேற்றுமை உருபான "ஆக" என்பது தொக்கி நிற்பதாக இராமாநுசர் கூறியுள்ளார். எனவே "அ" என்பதன் பொருள் "திருமாலுக்காக" என்று தேறும். "உ" என்பது உறுதியைக் குறிக்கும். ஆகவே அ, உ என்ற இரண்டெழுத்துக்களுக்கும் "திருமாலுக்காகவே" என்று பொருள். "ம" என்பது நம் ஆன்மாவைக் குறிக்கும். இராமாநுசர் திருவுள்ளப்படி ஆன்மா என்றால் 'ஆண்டவனுக்காகவே அடிமை' என்பதாகும். ஆகவே "ஓம்" என்ற பிரணவத்தின் தேறிய பொருள் "திருமாலுக்காகவே அடிமை செய்திருப்பது" என்பதாகும். திருமாலுக்கடிமை செய்வதென்றால் திருமாலடியார்களுக்கு அடிமை செய்வதென்பது கூறாமலே விளங்கும்.

"நமோ" என்றால் "எனக்காக" அல்லது "என்னுடையதாக" இங்கு ஒன்றும் இல்லை. எல்லாம் அவனது இன்னருளே என்பதாகும்.

"நாராயணாய" என்பதை பண்புத்தொகையடி வந்த சொல்லாகவும் அன்மொழித் தொகையடி வந்த சொல்லாகவும் இராமாநுசர் கூறியுள்ளார். "நாராணும் அயநம்" என்பது ஆறும் வேற்றுமையுள்ள பண்புத் தொகையாகும். "நாரம் அயநம் யஸ்ய ஸ:" என்பது அன்மொழித் தொகையாகும். 'ர' என்பது அழியும் பொருளைக் குறிக்கும். 'ந' என்பது அதை மறுக்கிறது. ஆகவே 'நர' என்பது நித்யமான பொருளைக் குறிக்கும். 'நரம்' என்பதே 'நாரம்' என்று முதல் எழுத்தில் விரிவடைந்து காணப்படுகிறது.

திருமாலை வழிபடும் இராமாநுஜர் நமது இதயத்தைக் கோயிலாகக் கொண்டு வாழ வேண்டுமெனறால் அதற்குத் தக்கபடி நமது உள்ளம், உரை, செயல் இம்மூன்றும் தூய்மையாக இருக்க வேண்டும். இராமாநுசர் காட்டித் தந்த "திருமாலின் குணங்களை" அநுபவிக்கும்படியான திறமை வேண்டும். அதற்கு லோகோபகாரமாக சாதிமத வேறுபாடின்றி "எங்கும் உளன் கண்ணன்" என்று காட்டும் திருமந்திரத்தின் பொருளை நாம் நன்கு உணர வேண்டும்.

திருமந்திரம் என்பது எட்டெழுத்துளுள்ள "ஓம் நமோ நாராயணாய"

திருமாலே நரனுக்கு நாராயணனுக இருந்து பதரிகாசிரமத்தில் இந்தத் திருமந்திரத்தை வெளியிட்டருளினுர் என்பது நாடறிந்த ரகசியம். 'அய நம்' என்ருல் இருப்பிடம்.

ஆகவே அழியும் பொருட்களான அசேதநப் பொருட்கள், அழியாத பொருட்களான நம்மைப் போன்ற ஆன்மாக்கள் இவற்றினுள்ளேயும் வெளியேயும் "கரந்தெங்கும் பரந்துளன்" என்று நம்மாழ்வார் அருளிச் செய்தது போலே எங்கும் விளங்குபவன் நாராயணன். நம் இராமாநுசர் பிரார்த்தனைக்கிணங்க நமது ஊனக் கணகளுக்கும் புலப்படும்படி வேங்கடத்திலுமிருந்து அருள் புரிகின்ருன். ஆகவே வைகுந்தத்திலிருந்து நமக்காக வேஙகடத்திலும், மாலிருஞ்சோலையிலும் நின்று அருள் புரியும் நாராயணனை நமக்குக் காட்டிக் கொடுப்பது திருமந்திரம். அத் திருமந்திரத்தை நமக்கு உபதேசித்தவர் இராமாநுசர். நமது இதயத்தில் வீற்றிருந்து திருமந்திரத்தின் செம்பொருளை உணர்த்தி திருமாலுக்கும், திருமாலடியார்க்கும் பணி செய்து கிடப்பதே நாம் பிறவி எடுத்ததற்குப் பயன் என்று அவர் நமக்கு வழி காட்டுகிருர். இந்த அரிய பொருளைத் தான் "இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்" என்ற பாசுரமும் கீழே தரப்படும் மங்களாசாஸநமும் தெளிவுபடுத்துகின்றன.

" ஸ்ரீவைகுண்ட விரக்தாய ஸ்வாமி
புஷ்கரிணீதடே |
ரமயா ரமமாணுய வேங்கடேசாய
மங்களாம் || "

*

---

41-ம் பக்கத் தொடர்ச்சி

அவனதுகாலம்,பொருள்,மற்றும்சக்தி அனைத்தும் வீணுகின்றன. ஆங்கிலத்தில் 'Aptitude' என்ருெரு வார்த்தை உண்டு. 'Aptitude' என்ருல் 'நாட்டம்' என்று பொருள். ஒருவனது சுவபாவத்தைப் பொறுத்து அவனது நாட்டம் அமைகிறது. மேனுடுகளில் பல அலுவலகங்கள் மற்றும் பல்கலைக்கழகங்களில் 'aptitude test' வைத்துதான் பல்வேறு தொழில்கள் மற்றும் மேற்படிப்புகளுக்கு இளைஞர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அதனுல் அந்த நாடுகள் கல்வியிலும் தொழிலும் விரைவில் முன்னேற்றமடைகின்றன. இத்தகைய ஒரு நடைமுறை நம் நாட்டில் உணமையில் கடைப்பிடிக்கப்பட்டிருக்குமானுல் நம்நாடும் என்றே உலக அரங்கில் சுதந்திர பாரதத்தில் முன்னணிக்கு வந்திருக்கும். அவரவர் விருப்பத்திற்கும் தகுதிக்கும் ஏற்றவாறு படிப்பும் வேலையும் ஒருவருக்குக் கிட்டுகிறது? ஏதோ விதி விலக்காக ஒரு சிலரைத் தவிர ஏனையோர் விஷயத்தில் இது இல்லையென்ற பதிலே கிட்டுகிறது.

கீதையில் பகவான் பல இடங்களில் ஸ்வதர்மம், பரதர்மம் என்ற வார்த்தைகளைப் பயன்படுத்துகிருர். "ஸ்வதர்மே நிதனம் ச்ரேய; பர தர்மோ பயாவஹ:" என்று கீதையின் தொடக்கத்திலேயே பரதர்மத்தை விட ஸ்வ தர்மம் பன்மடங்கு சிறந்தது என்று மீண்டும் மீண்டும் வலியுறுத்துகின்ருர்.

'வாழ்வில் வெற்றிக்கான வழியும் இதுதான். எனக்கு எதில் திறமையும், விருப்பமும் இருக்கிறதோ அதில் நான் முழுமூச்சுடன் இடையருது ஈடுபடுவேனுனல், நான் செய்யும் செயல் நாளடைவில் பார் புகழும் வகையில் சிறந்து விளங்கும். மாருகப் பணம், பதவி மற்றும் புகழிற்காக பிறர் செயலில் நான் ஈடுபடுவேனுனல் பாதை தவறி திறமை குலைந்து சீரழிய நேரிடும்'

இந்த இடத்தில் நம் மனத்தில் ஒரு ஐயம் எழலாம். சண்டையில் பல காலம் ஈடுபட்ட ஒருவன் அதில் வெறுப்புற்றுத் தூய தவ வாழ்வினை மேற்கொள்ளத் தலைப்பாடுவானுகில் அது சரியா தவரு என்ற கேள்வி எழலாம். அதற்கு விடையாக அடுத்த சுலோகத்தில் பகவான் கூறுகிருர்:

ஸஹஜம் கர்ம கௌந்தேய
ஸதோஷமபி ந த்யஜேத் |
ஸர்வாரம்பா ஹி தோஷேண
தூமேனுக்னிரி வாவ்ருதா: ||
(18-48)

'குந்தியின் புதல்வனே! கேடு உடையது என்ருலும் உடன் பிறந்த கருமத்தை விட்டு விடலாகாது. ஏனெனில் தீயைப் புகை சூழ்வது போல எல்லாச் செயல்களையும் குற்றம் சூழ்ந்துள்ளது'.

இயற்கையில் எங்கு நோக்கினுலும் நன்மை-தீமை, நலம்-பொலம் ஆகியவை சேர்ந்தே விளங்குவதைக் காணலாம். பூரண நன்மை அல்லது பூரண தீமை உடைய பொருள் என்று எதையுமே குறிப்பிட்டு நம்மால் சொல்ல முடியாது. மிகக் கொடிய பாம்பின் விஷமும்கூட மிகச் சிறிய அளவில் கொடும் நோய்களைப் போக்கவல்ல அருமருந்தாகப் பயன்படுகிறதைக் காணலாம். இந்த உண்மை நாம் செய்யும் கர்மங்கள் அல்லது செயல்களுக்கும் பொருந்தும்.

*(தொடரும்)*

(28-ம் பக்கத் தொடர்ச்சி)

'நம்முடைய மனக்கதவுகள் திறப்பதற்காகக் காத்திருக்கும் மாபெரும் இரவலனுகவே இறைவனை இந்துமதம் காண்கிறது. மனக்கதவுகள் திறந்ததும் அந்த இருளில் புகுந்து ஒரு மின்னற் பொறியால் ஒளியேற்றுகிறுர்; ஈசன் உலகை மிகவும் நேசிப்பதால் அவ்வுலகிற்காகத் தன்னையே அர்ப்பணம் செய்கிறுர். நாம் அவரைத் தோழனுகவும், அன்பராகவும் உயிர்த் துணைவராகவும் கருதுவதையே அவர் நாடுகிறுர். என்றுமே உலகைக் காப்பதையே அவர் கடமையாகக் கொண்டுள்ளார். யாசிக்கும் கோலத்திலிருப்பினும், தன்னைத் தஞ்சம் அடைந்தவர்களை இறைவன் காப்பாற்றுகிறுர். இக்கருத்தையே வரதுங்கபாண்டியரின் 'திருக் கருவைக் கலித்துறை' போற்றுகிறது.

'பாரிடஞ் சூழவரத் தான்பலி கொண்டுந்தன் பாதமலர்
சேர் அடி யார்க்குப் பெருவாழ்வு அளிப்பான்'

பிட்சாடனரின் திருவுருவத்தைக் கல்லிலும், உலோகத்திலும், வண்ணச் சுதையிலும் அமைத்துள்ளனர். எழில் மிகு அவ்வுருவங்களை ஆலயங்களில் கண்டு களிக்கலாம். திருவலம்புரம் (மேலப் பெரும்பள்ளம்) என்ற ஊரிலுள்ள சிவாலயத்திலுள்ள பிட்சாடனரின் உலோகத் திருவுருவம் மிகவும் வனப்புமிக்கது. இவ்வுருவை 'வட்டனை பட நடந்த நாயகர்' என்று இரண்டாம் இராசாதிராசசோழனின் கல்வெட்டு குறிப்பிடுவதாகத் தமிழகத் தொல்லியல் நிபுணர் திரு. நாகசாமி குறிப்பிடுகிறுர். கையில் வீணையேந்தியவாறு பிச்சையெடுக்கும் கோலத்திலுள்ள சிவபெருமானுக்கு அருகே மானும், ஒரு பூதமும் உள்ளன.

"கறுத்ததொரு கண்டத்தர் காலன் வீழக்
காலினுற் காய்ந்துகந்த காபாலியார்
முறித்ததொரு தோலுடுத்து முண்டஞ் சாத்தி
முனிகணங்கள் புடைசூழ முற்றந் தோறுந்
தெறித்த தொரு வீணையாரய்ச் செல்வார் தம்வாய்ச்
சிறுமுறுவல் வந்தெனது சிந்தை வௌவ
மறித்தொருகால் நோக்காதே மாயம் பேசி
வலம்புரமே புக்கங்கே மன்னி னுரே"

எனும் அப்பரின் பாடல் இக்கோலத்தையே சிறப்பிக்கிறது. நெல்லை மாவட்டம் பிரம்மதேசம் சிவாலயத்திலும், விருத்தாசத்திற்கு அருகேயுள்ள திருவட்டத்துறை ஆலயத்திலும் இக்கோலம் சிலைவடிவில் இடம் பெற்றுள்ளது. விரிஞ்சிபுரம் மார்க்க சகாயர் கோயிலில் அழகிய சுதையுருவாக பிட்சாடனரைக் காணலாம். இவ்வாறு எண்ணற்ற ஆலயங்களில் இவ்வெழிலுருவம் அமைந்துள்ளது.

"அவரது முகம் தாமரை போல ஜொலிக்கும்; அவரது தலையில் கங்கையும், திங்களும் இடம் பெற்றிருக்கும். படிகம் போல ஒளிவிடும் அவரது உடலில் திருநீறும் உருத்திராக்கமும் அணி செய்யும். அவரது கரங்களில் உடுக்கை, சூலம், ஒருசெடியின் கிளை, பிட்சைக்கலம் ஆகியன இடம் பெற்றிருக்கும். இவரே பிட்சாடனர்" (அகத்தியர்).



சரஸ்வதி, சக்தி, லக்ஷ்மி சிற்பங்கள்
தண்டபாணி ஈஸ்வரர் கோயில்—வேளாச்சேரி.

---

சில தவிர்க்க முடியா காரணங்கள் முன்னிட்டு "வால்மீகி திருவுள்ள விளக்கு" எனும் தொடர் கட்டுரையினை இம்மாத இதழில் வெளியிட முடியவில்லை.

—ஆர்.

---

# மாங்காய்ப் பால்

திரு. வி. ராகவன்—பள்ளத்தூர்.

பழமை வெறுத்துப் புதுமை விரும்பும் "புதுமைப் பித்தர்" ஆன நாம் அப்பழமையிலே பொதிந்துக் கிடக்கும் அரிய பொக்கிஷங்களையறிந் தோமல்லோம். பழமையிலே ஊறித் திளைத்திடும் பழமைவாதிகளையும் ஏளனம் செய்து இன்பம் காணுவதி லும் பின் தங்கினோம் அல்லோம். அக்காலத்தே வாழ்ந்த பெரியோர் கள் தம்தம் தவயோக சித்தியால் இக்கால விஞ்ஞான சாதனைகளையும் விஞ்சும்படியான சாதனை புரிந்துள்ள னர். "மாங்காய்ப் பாலுண்டு மலை மேலிருப்போர்க்கு தேங்காய்ப் பால் பால் ஏதுக்கடி" என்னும் பாடலையும் கேட்டிருக்கிறோம். "அம்மா ஊட் டாத சோற்றை மா ஊட்டும்" என் னும் சொல்லும வழக்கிலிருப்பதை யும் அறிவோம். பாலும் தயிரும் கலந்த நன்கு பிசைந்து அன்போடு அன்னை யிட்டாலும் தொண்டைக் குக் கீழிறங்காதது 'மாவடு' ஊறு காய் தொட்டுக்கொண்டால் சட்டி சோறும் வயிற்றினுள் சென்றுவிடும். இவ்வாறு இனிய மாங்காயின் பால் வாயிலே பட்டால் வாய் உதடு எல் லாம் வெநது புண்ணாகி விடும். இப் புண்ணை ஆற்றவல்ல ஔஷதமாய்த் திகழ்வது தேங்காய்ப் பாலாகும். ஔஷதமான தேங்காய்ப்பாலை விடுத்து உடலுக்குத் தீங்கிழைக்கும் படியான மாங்காய்ப்பாலை விரும்பு வதே என்ன ஆச்சர்யம்! இச்சொல் லில் பொதிந்துகிடக்கும் ஆழ் பொருளை நாமும கொஞ்சம் தெரிந்து கொளவோம்.

நமக்குக் கிடைத்திருக்கும் இவ்வி ரண்டு புறக்கண்களாலும் காணக் கிட்டாத பரம்பொருளை "கூட்கிலீ யுன்னைக் காணுமாறருளேல்" (திரு வா. 7-2-3) என்று கதறிக் கூப்பிட் டாலும் நம் கண்ணுக்கு அகப்படுப வன் அல்லனவன். கீதையிலே கண ணன் அர்ச்சுனனுக்கு ஞானக் கண ணைக் கொடுத்துத் தன்னைத் தானே காட்ட அவன் கணடான். நம ஊனக் கண்களுக்குக் கிட்டாதவன் நம் உள் ளத்தே உறைந்து கிடக்கிறான். "பூதக ஜலம் போலே அந்தர்யா மித்வம்" எனற திருவசன பூடண சூத்திரத் தில் கணடுள்ளவாறு நம்முள் கிடக் கிறான். தண்ணீரை நாடி எங்கும் தேடி யலையாது கிடைககும்படி இப் பூமியோ தன்னுள் கொண்டிருக் கிறாள். அத்தண்ணீரை மேலே கொணரக் கொட்டும் கோடாலியும் கொண்டு கடின உழைப்பின் பேரில் கிணறு வெட்டித் தணணீரைக்கொள் ளுகிறோம். அவ்வாறே அந்தர்மி யான அவனை "அட்டாங்கயோகம்" என்னும் கடும் யோக சாதனையின் மூலம் காண வேண்டும்.

இவ்வட்டாங்க யோகமோ 1. இய மம், 2. நியமம், 3. ஆசனம், 4. பிராணாயாமம், 5. ப்ரத்யாகா ரம், 6. தாரணை, 7. தியானம் 8. சமாதி என்னும் இவ்வெட்டு அங் கங்களையுடையதாய் "பக்தியோகம்" எனறு புகழப் பெறுகிறது. சில மணி நேரமே நாற்காலியில் அமர்ந்து பணி புரிபவர்கள் அதனால் ஏற்படும் அதி கச் சூட்டால் பல இன்னல்களுக்கு ஆளாகின்றனர். அவ்வாறிருக்க யோகியர்களோ இயல்பாகவுள்ள 98.4 டிகிரி தேகச் சூட்டைத் தான் அமரும் ஆசனம் ஆடை இவற்றால் பன்மடங்காகப் பெருககுகின்றனர். தர்ப்பாசனம் என்னும் தர்ப்பையினா லான தடுக்கு, மான் தோல், புலித் தோல் ஆகிய இவைகள் ஒன்றை யொனறு விஞ்சும்படியாக சூட்டை தரவல்லவை. தங்கள் யோக சக்திக்குத் தக்கவாறு இதில் ஏதேனுமொன்றை ஆசனமாகக் கொள்ளுகின்றனர். மேலும் நம் தேகச் சூட்டைச் சமநிலை யில் வைத்திருக்கக்கூடிய பருத்தியினா லான வெண்மையாடையை விடுத்து காவிநிற ஆடையை விரும்பித் தரித் துக் கொள்வது தம் உடல் சூட்டை மேலும் அதிகப்படுத்திக் கொள் ளவே. இவ்வாறு அதிகரிக் கப்புட்ட மூலாதாரச் சூட்டைத் தம் யோக சாதனையின மூலம் சிரசை நோக்கிச் செலுத்துவர். இருபுருவ மத்தியை அடைந்தவளவிலே, தன் யோக சாதனைக் கேற்ப ஒளி வட்டப் பிழம்பாக மாற்றுவர். இவ்வொளி வட்டத்தினுள் நிழல் உருவப்படங் கள் போன்று பல உருவங்களைக்காண் பர். இதனையே "ஜோதியைக் கண் டேன" என்பர். இவ்வாறு யோக சித்தி கைகூடியவர் தன்னையும் சூழ் நிலையையும் மறந்து அந்தர்யாமியான அப்பரம்பொருளைக் காணுகின்றனர். மேலும் கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய முக்காலங்களின் நிகழ்ச்சிகளையும் அறியும் திறமை பெற்றவராவர். இன்று, எரியும் ஓர் 40 வாட் பல்பானது தான் கொடுக் கும் ஒளியோடு அதைக் காட்டிலும் அதிகமான சூட்டையும் கொடுக்கி றது. இவ்வாறுண்டாகும் சூட்டை யும் ஒளியாக மாற்றச் செய்தால் நீண்ட காலம் குறைந்த மின் செலவில் அதிக ஒளியைப் பெறலாமாம். இயல் பான உடற் சூட்டைப் பன்மடங்கு பெருக்கி அதனையும் ஒளிப்பிழம்பாக மாற்றி இன்றைய விஞ்ஞானம் கண்ட றியாத ஒரு சாதனையை யோகிகள் அன்றே செய்து காட்டி விட்டனர்!

வைணவ பூர்வாசாரியர்களில் முதல்வராம் நாதமுனிகள் என் பாரை குருகை காவலப்பன், புண் டரீகாக்ஷர் என்னும் இருவரும்

ஆசாரியராகக்கொண்டு திகழ்ந்தனர். ஒரு தினம் தன் சீடர்கள் இருவரையும் நோக்கி, "பேரின்பமடைய இருவழிகள் உள்ளன; ஒன்று பக்தியோகம் என்பதனைக் கடைப்பிடித்து தான் ஒருவனே எம்பெருமானோடு கூடிக் குலாவிப் பேரின்பமடைவது; மற்றொன்று, எம்பெருமானுடைய குணானுபவங்களில் ஈடுபட்டு ஆழ்வார்களருளிய அமுதப் பாசுரங்களாம் "திவ்யப்ரபந்தம்" என்பதில் ஊன்றியனுபவித்துப் பிறரையும் அவ்வின்பத்தையனுபவிக்குமாறு செய்வது. இதில் எதனை நீங்கள் விரும்புகிறீர்கள்" என வினவினர். பின்னவராம் புண்டரீகாக்ஷரோ, "உலகமே ஆத்ம நாசமடைந்து பிணக்காடாயிருக்கும் போது அடியேன் ஒருவன மட்டும் எம்பெருமானோடு ஆத்ம விவாஹம் செய்துகொண்டு பேரின்பமடைவது தகுமோ? அடியேன் எபபடியாயினும் பரவாயில்லை. உலகமுய்யுமாறு திவ்யப்ரபந்தத்தை உபதேசிக்க வேணும்" எனப் பிரார்த்தித்தார். முன்னவரோ, "பக்தியோகம் ஒன்றையே கடைப்பிடித்து உய்ந்து போகிறேன். ஆகவே அதனையெனக்கு உபதேசிக்கப் பிரார்த்திக்கிறேன்" என்று வேண்டிக்கொண்டார்.

இவ்வாறு ஆசாரியரிடமிருந்து உபதேசமாகப் பெற்ற பக்தி யோகத்திலே நிஷ்டரான குருகை காவலப்பன் "கங்கை கொண்ட சோழபுரம்" என்னுமூரில் ஓர் குட்டிச் சுவற்றின் மீதமர்ந்து யோகத்திலே மூழ்கி 'பரவசநிலை' அடைந்தார். அநநிலையில் ஆசாரியரான நாதமுனிகளின் பேரரான ஆளவந்தார் பக்தி யோக ரஹஸ்யத்தை உபதேச மூலமாகப் பெற்றுச் செல்ல அங்கு வந்தார். சமாதி பங்கம் செய்யலாகாதென சுவற்றின் மறுபக்கம் ஓர் ஓரமாய்ப் போய் நின்று கொண்டார். சமாதி நிலை கலைநத காவலப்பர், "இங்கு சொட்டைக் குலத்தார் யாரேனும் வந்தனரோ?" எனக் கேட்டார்.

## சந்தாதாரர்களுக்கு....

31-3-88—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுககப்பட்டுளளன. சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும்போது, தங்கள் சந்தா எணகளைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆஙகிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

4 5 6 25 33 40 55 71 91 93 95 96 97 99 101 151 174 187 293 294 296 298 299 372 374 376 377 378 384 390 392 397 400 436 501 515 694 1211 1215 1216 1231 1296 1298 1304 1331 1343 1347 1352 1356 1360 1375 1381 1390 1398 1402 1404 1427 1428 1429 1432 1435 2657 2659 2660 முதல் 2675 2677 முதல் 2696 2698 முதல் 2728 2730 2731 2732 2735 முதல் 2740 2742 முதல் 2755 2757 2759 முதல 2765 2767 முதல் 2795 2798 முதல் 2804 2807 முதல் 2839.

'அடியேன்' என்று முன்னே வந்து தண்டனிட்டு நின்றார் ஆளவந்தார். "சமாதி நிலையிலிருந்தும் நான் வந்ததை எங்ஙனே அறிந்தீர்" எனக் கேட்டார். "பரமபதநாதனும் தானுமாக அநுபவித்து இன்புறுங்கால் பெரிய பிராட்டியார் (இலக்குமி தேவி) தன் திருமுலைத் தடங்களால் நெருக்கியணைத்தாலும் அவள் முகத்தைக்கூடத் திரும்பிப் பார்க்காத சஸ்வேஸ்வரன் என் கழுத்தை யமுக்கி நான்கு மூன்று தரம் அங்கே எட்டிப் பார்த்தான. இவ்வாறு அவன் எட்டிப் பார்ப்பதினின்றும் சொட்டைக் குலத்தார் யாரேனும் வநதிருக்கவேணும என்றிருந்தேன்" என்றாராம். எம்பெருமானின் உகப்புக்குரியரான நாதமுனிகளின் குலக்கொழுந்துகளும் அவர் உகப்புக்குரியவர்கள போலும்! (நாதமுனிகளின குலம் சொட்டைக் குலம்). மேலும், "எட்டெழுத்துமோதுவார்கள் வல்லர் வானமாளவே" (திருச்சந்த. 77) என்கிறபடியே பரமபதநாதனை அட்டாங்கயோக ப்ரணம பூர்வகமாக ஆச்ரயித்து திருவஷ்டாக்ஷரத்தை ஓதுமவர்கள் பரமபதத்தையும் ஆளப்பெறுவர் என்பதும் நிதர்சனமாகிறது.

நல்லவை தீயவை என்பதனைக் கண்டறியவல்ல அகக்கண்ணும் இழந்த பிறவிக் குருடனான திருதராஷ்டிரன் தன் மக்கள்பால் கொணட பாசத்தால் அவர்கள் செய்த அநீதியைக் கணடும் கணடித்தானில்லை. தம்பி பாண்டுவின் குமாரர்களுக்குரிய இராஜ்யத்தைச் சூதான வழியில் கைப்பற்றிக் கொணடதோடு அல்லாமல் அவர்களுக்குப் பல கொடுமைகளும் புரிந்திட்டனர் திருதராஷ்டிர குமாரர்கள். பாணடவர்களுக்கோ தங்கள் நாட்டை அடைந்திட யுத்தத்தைத் தவிர வேறு வழியில்லை. ஆகவே இரு திறத்தாரும் யுத்தம் நிமித்தமாகக் குருக்ஷேத்திரம் என்னுமிடத்திலே தங்கள் தங்கள சேனை வீரர்களோடு குழுமினர். யுத்த பூமியினின்றும் சுமார் 200 மைல்கள் தூரமுள்ள ஹஸ்தினபுரத்திலிருக்கும் திருதராஷ்டிரன், யுத்த ரங்கத்திலே நடக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் உடனுக்குடன் அறிய விரும்புகிறான்.

"இருள் கடியும் முனிவர்" (திருவா. 10-7-7) என அறிவு இல்லாமையாகிற இருளைப் போக்குகிற ஸ்மிருதிகளின் கர்த்தாக்களில் சிறப்புற்றவரான வ்யாச மஹரிஷி, செந்தாமரைக்கண்ணனின் ஆவேசாவதாரம் ஆவார். இதிகாச புராணங்களிலே ச்ரேஷ்ட்டமான மஹாபாரதத்தை இயற்றிய பெருந்தகை. இவரின் அன்புக்கும் கருணைக்கும் உரியரான சஞ்சயன் என்பார் "கலையறக்கற்ற மாந்தர்" (திருமாலை 7) என்றவாறு ஸ்ருதி ஸ்மிருதி ஆகிய சாஸ்த்திரங்களைக் கற்றறிந்து அதன் வழி நடக்கும் பெரியார். மேலும், "ஊன்வாட உண்ணாது உயிர் காவலிட்டு" (பெரிய திரு. 3. 2. 1.) என்றவாறு இவ்வாத்ம சரீரம் சத்வ, ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்கள் கொண்டது. இவ்வாத்மாவிற்குத் தாரகமான சத்வ குணத்தை மேலோங்கச் செய்யும் ஆகாரத்தையுட்கொண்டு, மேலும் ஆத்மாவிற்கு நாசத்தை விளைவித்திடும் "ஈனமாய எட்டும்" (திருச்சந்த விருத்தம் 114) என்றவாறு (1) காமம் (2) குரோதம் (3) லோபம் (4) மோஹம் (5) மதம் (6) மாத்ஸர்யம் (7) அஞ்ஞானம் (8) அசூயை ஆகிய இவ்வெட்டினையும் வேறுடன் களைந்தவர். மேலும் "எட்டினோடிரண்டெனும் கயிற்றினால் மனந்தனைக் கட்டி" (திருச்சந்த 83) என்றவாறு எட்டோடு இரண்டும் சேர்த்தால் பத்து என்றாகிறது. "பத்துடையவர்க்கெளியவன்" என்பதில் பத்து என்பது பக்தியைக் குறிக்குமாப்போல் இங்கு சிறப்பாக பக்தி யோகத்தைக் குறிக்கிறது. மேலும் "எட்டு" என்பது பக்தியுடையோர்க்கு எளியவனான ஸ்ரீமந் நாராயணனுக்கே உரித்தான எட்டெழுத்தாகிற "திருமந்திரம்", "இரண்டு" என்பது 'த்வயம்' எனப்பெறும் மந்திர ரத்னம் ஆகும். ஆக இவற்றைப் பக்தியோடு அனுசந்தானம் செய்து நிலைநில்லாது அலைபாய்ந்திடும் மனத்தைக் கட்டித் தன் சுவாதீனத்தில் கொண்டு வந்த தவயோகி.

"அட்டாங்க யோகத்தை அடைய வேதத்தை நன்கு கற்றறிந்து ஓதி அதன் மெய்ப்பொருளை அறிதல் வேண்டும். யோகம் கைவந்த வளவிலே வேதத்தை மீண்டும் ஓத வேண்டும். வேதம் யோகம் இவ்விரண்டின் நிறைவினால் பரம்பொருள் பிரகாசிக்கிறான். அப்பரம்பொருளைக் காண்பதற்கு வேதம் ஓர் கண்ணாகவும், யோகமோ சிறந்த மற்றொரு கண்ணாகவும் திகழ்கின்றன" என்று விஷ்ணுபுராணத்தில் கண்டுள்ளது போல் வேதத்தைக் தக்க ஆசானிடம் பயின்று அதன் பொருளை நன்குணர்ந்து இயமம், நியமம் ஆகிய அட்டாங்கயோக சாதனை மூலம் ஊனக்கண்ணால் காணமுடியாத அப்பரம்பொருளைத் தன் ஞானக் கண்கொண்டு பார்க்க வல்லமை பெற்றவர். மேலும் கிருஷ்ணன் கீதையில் "உனக்குத் தெய்வத்தன்மை பொருந்திய கண்ணைக் கொடுக்கிறேன்" என்றவாறு ஞானக் கண்ணைப் பெற்றதாலும் குருக்ஷேத்திரத்தில் நடப்பவை அனைத்தையும் தான் கண்டு திருதராஷ்டிரனுக்கும் எடுத்துரைத்தான். ஓரிடத்தில் ஒளிபரப்பப்படும் ஓர் நிகழ்ச்சியை நாம் வீட்டிலிருந்தே 'டெலிவிஷன்' என்னும் கருவிகொண்டு கண்டு களிப்புறும் இன்றைய விஞ்ஞானச் சாதனையை முன்னரே சஞ்சயன் போன்ற யோகியர் சாதித்து விட்டனர்!

"காவலில் புலனை வைத்து" (திருமாலை 1) எனக் கட்டுங்கடங்காது பட்டிமேய்ந்திடும் இந்திரியங்களையடக்கித் தன் சுவாதீனத்திற்குக் கொணர்ந்து பக்தியோகமாகிற அட்டாங்கயோகத்தில் சித்தியடைந்தவர்கள், தங்கள் யோக சாதனையால் 'காயகல்ப' தேகிகள் ஆயினர். கண்டு கிடைத்ததைக் கிடைத்தபோது உண்டு யோக நிஷ்டராய்த் திகழ்ந்தனர். சிரசில் பெருமூளையையடுத்து மாங்காய் போன்று வடிவமைந்த ஓர் பையினின்றும் பால் போன்று திரவமான அமுதம் சுரக்குமாம். அதனையுண்டு கபாலத்திலே அந்தர்யாமியான அப்பரம்பொருளைக் கண்டு அவனோடு கலந்து களிப்புறும் 'பரவச நிலை' எய்துவராம். இவ்வாறு பேரின்பத்தில் திளைத்திடும் இவர்கள் நம்மைவிட உயர்ந்தவிடத்திலன்றோ இருப்பவர்கள். சரீரத்தில் உயர்ந்தவிடத்தில் சிரசு அமைந்திருப்பது போல் இவர்கள் பரம்பொருளைக் கபாலத்தில் கண்டு பரவச நிலையில் இருப்பதானது உயர்ந்தவிடமான மலைமேல் என்றாகிறது. பூமியிலுள்ளார்க்குத் தேங்காய் இனிய பொருளாவதுபோல் மலை மேலிருப்போருக்கு மாங்காய்ப் பால் என்றாயிற்று.

மங்கையரின் கொங்கையோ தேங்காய் போன்று வடிவமைந்துள்ளது. அதினின்றும் சுரக்கும் அமுதமே 'தாய்ப்பால்' ஆகிறது. பிறந்த குழந்தைக்குத் தாரக போஷகங்களாவது தாய்ப்பாலே. தாய்ப்பாலை உண்ண விரும்புவார் மறுபிறவியெடுத்துக் குழந்தையாய்ப் பிறந்தால்தான் இது சாத்தியமாகும். "ஸம்ஸார ஸாகரம் அநந்தக்லேச பாஜநம்" (ஜிதந்தே 4) "மிகக் கொடியதும் எல்லையில்லாத் துக்கத்திற்கும் இருப்பிடமான சம்சாரப் பெருங்கடல்" என்றவாறு; பரம்பொருளோடு சல்லாபித்துச் சுகிக்கும் யோகிகள் தாய்ப்பாலில் இச்சை கொண்டு மீண்டும் பிறவி வேண்டிக் குழந்தையாய்ப் பிறந்து பிறவிப் பெருங்கடலில் விழுவரோ? பரமபதத்தையும் ஆளவல்லவர் ஒருக்காலும் சம்மதியார். ஆகவேதான் "தேங்காய்ப்பால் ஏதுக்கடி" என வினவுகின்றனர்.

✱



ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொதுமக்களுக்கோர் நற்செய்தி

**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்களால் ஸ்ரீமுகமும் ஆசியும் அருளப் பெற்று நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்குரிய தெய்வீக சாதனங்கள்**

| எண். | யந்த்ரங்களின் பெயர்கள் | விலை ரூ. |
|---|---|---|
| 1. | ஸ்ரீமகா மேரு பஞ்சலோம் 16×16 10×10 செ.மீ. | நேரில் |
| 2. | ஸ்ரீமகா மேரு பஞ்சலோகம் 6×6 செ.மீ. | 550/- |
| 3. | ஸ்ரீமகா மேரு பஞ்சலோகம் 4½×4½ செமீ. | 350/- |
| 4. | ஸ்ரீமகா கணபதி யந்த்ரம் 8×8 செ.மீ. | 130/- |
| 5. | பீஜாட்சரம் உள்ள ஸ்ரீசக்கரம் 42×42 செ.மீ. | நேரில் |
| 6. | பீஜாட்சரம் உள்ள ஸ்ரீசக்கரம் 32×32 செ.மீ. | நேரில் |
| 7. | ஸ்ரீமகா லக்ஷ்மி மஹா யந்த்ரம் 24×24 செ.மீ. | 1100/- |
| 8. | ஸ்ரீமகா சுதர்ஸனம் 16×16 செ.மீ. | 600/- |
| 9. | ஸ்ரீ சக்கரம் 8×8 செ.மீ. | 130/- |
| 10. | சிதம்பர சக்கரம் '51' | 130/- |
| 11. | சுப்ரமணயர் | 130/- |
| 12. | சுதர்ஸனம் | 130/- |
| 13. | நவக்கிரக யந்த்ரம் | 130/- |
| 14. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம், ஸ்ரீசாம் ராஜ்ய லக்ஷ்மி, ஸ்ரீமகா சுதர்ஸனம் 16×48 செ.மீ. மூன்றும் சேர்ந்து. | 1600/- |
| 15. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம், ஸ்ரீசாம் ராஜ்ய லக்ஷ்மி, சுதாஸனம் 8×24 செ.மீ. மூன்றும் சேர்ந்து. | 450/- |
| 16. | சூலினி, சரபேஸ்வரர், பிரத்யங்கிரா மூன்றும் சேர்ந்து. 16×48 செ.மீ. | 1600/- |
| 17. | தச மகா வித்தை 10 யந்த்ரஙகள் | நேரில் |
| 18. | கண் திருஷ்டி ஒரு புறம், மறுபுறம் சுதர்ஸனம் டாலர் | 65/- |
| 19. | காமாட்சி ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீசக்கர டாலர் | 65/- |
| 20. | காமாட்சி ஒரு புறம், மறுபுறம் தனுகர்ஷண டாலர் | 65/- |
| 21. | காமாட்சி ஒரு புறம், மறுபுறம் மாங்கல்ய பாக்கிய டாலர் | 65/- |
| 22. | ஸ்ரீ முருகன் ஆகர்ஷண டாலர் | 55/- |
| 23. | விவாக பிராப்தி டாலர் | 65/- |
| 24. | ஸ்ரீ ஐயப்பன் டாலர் சன்னிதானத்துடன் | 65/- |
| 25 | ஸ்ரீ சக்கரம் லக்ஷ்மி பீஜத்துடன் டாலர் | 65/- |
| 26. | ஸ்ரீ தேவி கருமாரியம்மன் செப்பு டாலர் | 11/- |
| 27. | நவக்கிரக டாலர் அந்தந்த பிம்பத்துடன் | 65/- |
| 28. | கண திருஷ்டி யந்த்ரம் (சட்டத்துடன்) | 65/- |
| 29. | எலகட்ரானிக் பேங்கிள்ஸ்(அநதந்த ராசிக்கு) | 25/- |
| 30. | துளசி மணி மாலை வெள்ளிக் கவசத் துடன், எண்ணிக்கை 54 | 125/- |
| 31. | துளசி மணி மாலை வெள்ளிக் கவசத் துடன்: எண்ணிக்கை 108 | 250/- |
| 32. | ருத்ராக்ஷ மணி மாலை வெள்ளிக் கவசத் துடன் எண்ணிக்கை 54 | 300/- |
| 33. | ருத்ராக்ஷ மணி மாலை வெள்ளிக் கவசத் துடன் எண்ணிக்கை 108 | 600/- |
| 34. | தாமரை மணி மாலை வெள்ளிக் கவசத் துடன் எணணிககை 54 | 180/- |
| 35. | தாமரை மணி மாலை வெள்ளிக் கவசத் துடன் எண்ணிக்கை 108 | 360/- |
| 36. | ரசலிங்கம், ஸ்படிகலிங்கம், மரகதலிங்கம், பாணலிங்கம, சாலிககிரமம், பஞ்சாயுத செட், வலம்புரி சங்கு, வீட்டுப பூஜைக் குரிய பஞ்சலோக விகரகங்களும ரசவிநு யகர் ரச மணிகளும் கிடைக்கும. | நேரில் |

108 யந்த்ரங்கள் நவசக்தி நிலையம் வசம் உள்ளன. கோவிலகளுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம **தேவதைகளுக்கு** வேண்டிய சகல யந்த்ரஙகளும் கிடைககும். ஒன்றின விலை. ரூ. 105/- வெளிநாட்டுக்கு 25% அதிகம. **விலைப்பட்டியலுக்கு** 0.50 தபால் தலையுடன் கீழ்கண்ட விலாசத்துக்கு தொடர்பு கொளளவும்.



"லோகாஸ் சமஸ்தாஸ சுகினோ பவந்து"


**ஸ்வாமிஜி ஸ்ரீமுருகபூஷணம்**

ஸ்ரீவித்யா உபாசகர் & தலைவர் நவசக்தி நிலையம்

153, லாயிட்ஸ் ரோடு (ஸ்டேட் பேங்க் எதிரில்) கோபாலபுரம்,

சென்னை-600 086. போன்: 472013, Res. 841254.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

